உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வேதாகம நிரூபணம்.



இது

யாழ்ப்பாணம் வேதாகம சைவசித்தாந்த சபைத்தலைவரும்

ஆலயசேவை, சாதியும் சமயமும் முதலிய நூல்களின்

ஆசிரியருமாகிய

அச்சுவேலி

**சிவஸ்ரீ. சு. குமாரசுவாமிக்குருக்கள்**

அவர்களால் எழுதி,

சைவாபிமானிகளுடைய பொருளாதரவுகொண்டு

கரணவாய் சைவ ஆராய்ச்சிச் சங்கத்தாரால்

பதிப்பிக்கப்பட்டது.



கலாநிதியந்திரசாலை

பருத்தித்துறை.

டிசம்பர் 1950.] [விலை ரூ. 1-00.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வேதாகம நிருபணம்.



இது

யாழ்ப்பாணம் வேதாகம சைவசித்தாந்த சபைத்தலைவரும்
ஆலயசேவை, சாதியும் சமயமும் முதலிய நூல்களின்
ஆசிரியருமாகிய

அச்சுவேலி
**சிவஸ்ரீ. ச. குமாரசுவாமிக்குருக்கள்**
அவர்களால் எழுதி,

சைவாபிமானிகளுடைய பொருளாதரவுகொண்டு

கரணவாய் சைவ ஆராய்ச்சிச் சங்கத்தாராற்
பதிப்பிக்கப்பட்டது.



கலாநிதியந்திரசாலை
பருத்தித்துறை.

1950.

உ

சிவமயம்.

# முகவுரை.

சைவசமயத்துக்குமாறான பலகிளர்ச்சிகளும் கொள்கைக ளும் பரம்பிவருவதாலும், சைவப்புலவர் திரு வேந்தனர் முதலி யோரும் பலபிரசுரங்கள் வெளியிட்டிருப்பதாலும், அவற்றைகியா யவாயிலானேமறுத்து, உண்மையை வெளிப்படுத்துமாறுசைவா பிமானிகள் பலர் வேண்டிக்கொண்டமையின் வேதாகம நிருப ணம் என்னும் இந்தநூல் எனது தந்தையாரால் எழுதப்பெற்றது.

நமது தொல்லாசிரியர்கள் அருளிய பொன்மொழிகளை விரோதித்து, வேதாகமங்களை அநியாயமாகத் தூஷித்து, நவமார்க் கத்தை மேற்கொண்டுள்ளாரை நியாயத்தினல் மறுத்து, வேத சிவாகமங்களே சுத்தாத்துவித வைதிக சைவசித்தாந்த முதனூல்க ளாமென்று விளக்குதலின், இந்நூல் வேதாகமநிருபணம் எனப் பெயர் பெற்றது.

இந்தநூலில் மறுக்கப்பட்டவர்கள் யாவர் எனில், வித்து வானும் பண்டிதரும் சைவப்புலவரும் ஆகிய திரு. க. வேந்தனர் அவர்களும், வித்துவானும் பண்டிதரும் ஆகிய திரு. கா. பொ. இரத்தினம் பி. ஏ. (ஆனர்ஸ்) பி. ஓ. எல். அவர்களும், கொக்குவில் திரு. வே. விசுவலிங்கம் அவர்களும், திரு. நவரத்தினம் அவர்க ளும் அவர்களையுள்ளிட்ட பிறருமாவர்.

இந்நூல் ஆரியமும் தமிழும் என்பது முதல் அருணகிரி நாத சுவாமிகள் என்பதிறுதியான தலையங்கங்கள் கொண்ட (சுஎ) கூறுகளாக எழுதப்பெற்றுள்ளது.

இந்தநூலில், சைவப்புலவர் என்றுவரும் இடங்களில், அங்ங னம் கூறியது திரு. க. வேந்தனரையே குறிக்கும் என்றும், ௯அ, ௫௪-வது பகுதிகளில் அவரே பண்டிதர் எனப்பகரப்பட்டுள்ளார் என்றும் அறிந்து கொள்ளற்பாலதாம். ௪௫, ௪௬, ௪௭, ௪அ ௬0-ம் பகுதிகளில் மறுக்கப்பட்டவர் திரு. பண்டிதர் இரத்தினம் அவர் களே என்றும், ௬௪-வது பகுதியில் ஆராய்ச்சிக்காரர் என்பது பண்டிதர் இரத்தினம் அவர்களையும் திரு. விசுவலிங்கம் அவர்களை யும் அவரையுள்ளிட்ட ஏனையோரையும் குறிக்கும் என்றும், ௫௪, ௫அ, ௫௬-வதுபகுதிகளில் மறுக்கப்பட்டவர்கள் பண்டிதர். திரு. கா. பொ. இரத்தினம் அவர்களும், சைவப்புலவர் திரு. வேந்த னரும் ஆம் என்றும் அறிந்துகொள்ள வேண்டியனவாம்.

இந்தநூலை அச்சிடுவதற்குப்பொருள் சேகரித்தல் முதலிய உதவி களைச்செய்த அபிமானிகளுக்கும் பொருளுபகரித்த சைவாபிமானப்பெரி யார்களுக்கும், பதிப்பித்துதவிய கரணவாய்ச் சைவ ஆராய்ச்சிச்சபையா ருக்கும் சைவசமூகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

இங்ஙனம்,

அச்சுவேலி. கு. வைத்தீசுவரக்குருக்கள்.

# மதிப்புரை.

கரணவாய் சைவ ஆராய்ச்சிச்சபைக் காரியதரிசி
ஸ்ரீமத். பண்டிதர் ஞா. சபாபதிதேசிகர் அவர்கள் எழுதியது.

திருச்சிற்றம்பலம்.

வேத மோதி வெண்ணூல் பூண்டு வெள்ளை யெருதேறிப்
பூதஞ் சூழப் பொலிய வருவார் புலியி னுரிதோலார்
நாதா எனவு நக்கா வெனவு நம்பா எனநின்று
பாதந் தொழுவார் பாவந் தீர்ப்பார் பழன நகராரே,

## வேதாகம நிரூபணம் சைவசித்தாந்த பரிபூரணம்.

இருபதாம் நூற்றுண்டின் மத்தியாகிய இக்காலத்து வேந்தராட்சி யொழிந்து குடிகள் தம்மைத் தாமாட்சிசெய்வதோர் பொருளாட்சியாமென்று விழைந்து ஆட்சிநிகழுதலின், இதன்பேருக, சர்வான்மாக்களும் செய்த பாவத்தால், சிவனுகிய பதியும் அவனருளிய வேத சிவாகமங்களும், மக்களால் வேட்ட வேட்டபடிவேட்டையாடப்படத்தக்கனவெனச் சிலர் மருண்டு வேட்டைக்கானிடை வேட்டையாடப்புக்கனர். இவர்கட்கு அவை அகப்படுவனவுமன்று; அழிக்கப்படத்தக்கனவுமன்று; பயந்தோடி யொழிப்பனவுமன்று; எதிர்த்துவந்து காணப்படுவனவுமன்று. மற்று, வீணே மொழியிறுமாப்பான் மருண்டு மயங்குவாரை மேன்மேலும் மருட்டி பயக்கி வேட்டைக்கானிடை வெகுதூரம் உலைப்பன அவை என்று தமிழ்ப்போலிகளாமின்னோர் உணர்கிலர்போலும்.

"மறைத் திறநோக்கி வருந்தினர்க் கொழித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தின் அவ்வயின் ஒழித்தும்." என்ற

மணிவாசகப்பெருமான் திருவாக்கையாயினும் இம்மாக்கள் உணர்ந்திடப் பெற்றனரின்றே.

வண்டிச்சவாரியிற் கைசேர்ந்த ஒருவன், மோட்டோர்ரதம் செலுத்தவும் பயின்று, பின்னர் மோட்டோர்ரதம் வெகு விரைவாகச்சென்ற ஒரு சமையம் அதனைத் தணிக்க எண்ணியவுடன், அவன் கைகள் பிடிகயிற்றை இழுத்த கைப்பழக்கத்தால் ரதத்தின் ஸ்ரியரிங்கை இழுத்தாற்போன்று, இன்னோர்சிலர் தம்மொழிப்பயிற்சி முறைமையை வேதாகமங்களினும் தம்மனம் போனபடி கையாண்டு வாளாகெடுகின்றனரே. குருபரம்பரையினன்றி வாராக்கல்வி பூர்வ புண்ணியமுதலியவற்றுன் வரினும், குருவருள் பெருவழிப் பழுதுடையதேயாம். பிற கல்விக்கே இங்ஙனமாயின், வேதாகமங்களை உள்ளவாறு கற்கக் குருவின் இன்றியமையாமை சொல்லவும் வேண்டுமா! குருவின்றிக் கற்றல் கூடுமெனின் பொய்ப்பொருளைக் கற்றறியமட்டும் கூடுமெனவே நாம் தெளிவாக எடுத்துரைக்கின்றேம். இது கண்கூடாகவும் இக்காலம் பலரிடம் கண்டதுமாயிற்று. என்னே கலியின் கோலம். 'ஏவவும் செய்கலான் தான்தேருன் அவ்வுயிர், போஒ மளவுமோர் நோய்' என்ற பொய்யாமொழிக்கு இலக்காக இக்காலம் பலர் வலிபெற்றோங்கிவிட்டனர். இதனுல் மக்கட்குநோயின்மேல் நோயாகிவிட்டது; தீராநோயாகிவிட்டது. தமக்கென இயல்பான விவேகமின்றி, பூர்வசென்மபுண்ணியவிசேடத்தால்வரும் ஞானமுமற்று, நல்ல சைவபரம்பரையிற் பிறக்கும் பாக்கியமுமற்று, பரம்பரையான கல்விமான்களிடம் மாணவனுகக் கற்கும்பேறுமற்று, வாகடம் வாசித்து வைத்தியம் இயற்றும் பண்டிதரேபோன்று வாசித்துப் பாடம்புரிந்த பண்டிதர் சிலர் தம் உண்மைநிலையையும் உணராது, சைவ மெய்யன்பர் மனம் புண்ணுவதையும் குறியாது, சிவத்துரோகம் என்றும் கருதாது, தீராநாருக்காளாக்குமென்றும் அஞ்சாது, தொல்லைத்தக்கனேபோன்று தமக்கும் தம்மோடுற்றூர்க்கும் பெருந்தீவினை செய்து, மெய்மைச் சைவ

ரது வெகுளியையும் பெருவெறுப்பையும் பெருகத்தேடிக்கொண்டமை வருத்தத்துக்கிடமாகின்றது. இன்னோரது ஆணவ வலிதான் என்னே!

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்கினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

என்ற திருவாக்கும் இன்னோர் செவிக்கு நஞ்சாயதோ! எவ்வெவர் கூறிய வாக்கியங்களாயினும் அவ்வவர் வாக்கியங்கட்கெல்லாம் இருவேறு பொருள் நிச்சயம் உண்டு. ஒன்று பொய்ப்பொருள். மற்றது மெய்ப்பொருள். மெய்ப்பொருளையறிவதே அறிவு. மெய்ப்பொருளைவிட்டுப் பொய்ப்பொருளை அறிவது அறிவின்மை. வேதம், ஆகமம், புராணம் முதலாமற்றுள்ள பலவற்றிற்கும் அறிவீனன் பொய்ப்பொருள் காண்பான். எவன் பரம்பரையாய்வந்த குருவிடம் இவற்றைக்கேட்டிலானோ அவனுக்கு எது மெய்ப்பொருளென்பது எப்படித்தெரியும். குருவருளால் இறைவன் கூறிய மெய்ப்பொருளை யறிவதேயன்றி. தானேயறிந்த ஒரு பொருள் அம்மெய்ப்பொருளாமென்று தெளிவதற்கு ஒருவழியில்லையே. மெய்ப்பொருளாவது குருபரம்பரையாகவரும் பொருளேயாமென்றும் காண்க. இம்மெய்ப்பொருளைக்கண்டவனே அறிவுடையவனாவான். ஒருவனுக்கு அறிவுண்டாயின் அவ்வறிவுகொண்டு மெய்ப்பொருளைக் காணவேண்டும். அவ்வறிவும் மெய்ப்பொருளைக் காணத்தக்கவாறு செம்மைப்படுத்தப்படவேண்டும். அவ்வாறு செம்மைசெய்யுங் கருவிகளே இலக்கண இலக்கியங்களும் தருக்கம் முதலாயனவுமாம். இவற்றாலும் செம்மையுறாதவரறிவு தீட்டியுங்கூராத ஆயுதத்தையே நிகர்க்கும். இத்தகைய நிலையுடையோரே இக்காலம் மிகுந்து பொலிந்து தம்மைத்தாமேமதித்து, தெய்வசிந்தைகுன்றி உலகவாழ்வே சதமும் கதியுமெனக் கடைப்பிடித்துக்கெடுகின்றனர். இக்கேட்டிற்குத் துணையாகச்சிலர் குருவாகித் தம்மைத்தமிழறிஞர் என்று அவர்க்குக்காட்டி, வாயாலும் கையாலும் அருந்தமிழ் வாக்கியங்களைப்பொழிந்து மயக்கிப் பொன்போன்ற வேதாகம உண்மைகளைத் தான் தேடியதாற்காணாராய் கரிகண்டு பிறர்க்குங் காட்டிச் சகிக்கொணாத்துன்பே தருகின்றனர். இன்னோர் திறத்தைப்பார்த்த பரிபவம் சொல்லவொண்ணாது. இன்னோர்க்கு எதிருரைத்தலும்சேற்றிற் கல்லெறிதலே போலும். எனினும். அறிஞருரையைக்கேட்டு வாழும் வாழ்க்கையையுடைய சைவமக்கள் பலரும் உண்மையை உணர்ந்து உய்தற்கு இன்னோர் செயல் தடையாயூன்றுதலையுன்னுமிடத்து ஒரு திருத்தொண்டு சைவத்திற்குச்செய்வது சைவஅறிஞர் கடனென்பதும் பண்டையமரபென்பதும் காணக்கிடைத்தலின், இத்தருணம், சைவத்திருத்தொண்டாகவுள்ள வேதாகம நிரூபணம் என்னும் சைவஞாயிறு உதிக்கவேண்டியது இன்றியமையாததாகின்றது. சைவ மெய்யடியார்களது உள்ளக்கவலை தீரவேண்டி, பரங்கருணைத்தடங்கடல்—அடியார்க்கிரங்கும் அருண்முகில்—பாண்டிநாட்டுச் சமணிருளைச் சம்பந்தசுவாமியைக்கொண்டு பண்டுபோக்கியவாறு போன்றும், சிதம்பரத்துவந்தபுத்தரை மணிவாசக அடிகளைக்கொண்டு வாதிலழிவித்தவாறு போன்றும், இன்று, சைவஉட்பகையால் முனைந்துள்ள கொடிய இருளைப்போக்கத் திருவுளங்கொண்டு, அந்தணர்குலதிலகமாகிய அச்சுவேலி குமாரசுவாமிக்குருக்களாய் விளங்கி, வேதாகம நிரூபணமென்னும் சிவசூரியனை, அவர்தம் உள்ளமென்னும் உதயகிரியிடைத்தோன்றநல்கினனென்றறிக. இச்சிவஞான சூரியன் சைவத்துட் பதுங்கிய கபடவிருளாகிய உட்பகையை வெளிக்காட்டித்துரத்திப்பரிபூரண பிரகாசஞ்செய்து என்றும் நின்று நிலவுக என்று பல்லாண்டுகூறி, சைவநன்மக்களனைவரும் இச் சிவசூரியனைத்தரிசிக்கும்வண்ணம் தோன்றுந் திக்குநோக்கி நிற்குமாறும் கேட்டுக்கொண்டு, நம்வணக்கத்தையும் உவந்து ஈகின்றும். குருக்களவர்கள் சிவதொண்டு சைவஉலகம் பெரிதும் போற்றற்குரித்து. சுபமஸ்து.

1-11-50.

ஞா. சபாபதிதேசிகர்.

உ

கணபதி துணை.

# வேதாகம நிரூபணம்.



திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

ஆகமத்தோடு மந்திரங்க ளமைந்த சங்கத பங்கமாப்
பாகதத்தொ டிரைத்துரைத்த சனங்கள் வெட்குறு பக்கமா
மாகதக் கரிபோற் றிரிந்து புரிந்து நின்றுணு மாசுசேர்
ஆகதர்க் கெளியே னலேன் திருவாலவா யரனிற்கவே.

திருச்சிற்றம்பலம்.

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள்.

ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

## ஆரியமும் தமிழும்.

சைவசமயிகளாகிய எமக்கு முதனூல்களாகவுள்ள வேதம் ஆகமம் என்னும் இரண்டும் வடமொழியிலேயே உள்ளன தென்மொழியிலன்று. வடமொழியாகிய சம்ஸ்கிருதமும் தென்மொழியாகிய தமிழும் நமக்குரிய பாஷைகளாகவே ஆன்றோர்கள் கைக்கொண்டு வருகிறார்கள். இந்த இரண்டு பாஷைகட்கும் முதற்குரவர் சிவபிரானே ஆதலாலும், இவையிரண்டினுக்கும் இலக்கணம் பாணினிமுனிவராலும் அகத்தியமுனிவராலும் அருளிச்செய்யப்பட்டமையாலும், பிற காரணங்களாலும் இவை இரண்டும் தம்முட் சமத்துவமுடையனவாம். வடமொழியையும் தென்மொழியையும் கற்றறிந்தவரே சைவசமய உண்மைகளைச் சந்தேகவிபரீதமின்றி அறிவர். இந்த இரு பாஷைகளும் நமது இருகண்களையொப்பன. இந்த இரண்டுபாஷைகளிலுமே நம் சமயநூல்கள் அளவின்றியிருத்தலினால், அப்பாஷைகளாகிய ஞானக்கண்களைப்பெறாதார் அந்நூல்களை அறிந்து நற்பொருள்கண்டு பயன் கொள்ளமாட்டார். கண்ணுதலார் அருளிச்செய்த இருமொழிப்பெருமையினையும் செவ்விதினுணர்ந்து அவற்றை நமக்குரிய சொந்தப்பாஷைகளாகக் கோடல்வேண்டும். துரபிமானங்கொண்டு வடமொழியையோ தென்மொழியையோ பழித்துரைப்பது நம்மனோரெல்லாம் உய்யத் திருவவதாரஞ் செய்த ஆசாரியமூர்த்திகட்குத் திருவுள்ளச்சம்மதமாகாது. இங்ஙனமாகவும் இக்காலத்துச் சைவர் சிலரிடத்தில் வடமொழிப்பகை உண்டாயிருப்பது வருந்தத்தக்கதாம்.

1. "ஆரியமுந் தமிழு முடனே சொல்லிக்
காரிகை யார்க்குங் கருணை செய்தானே"
எனப் பத்தாந்திருமுறையாகிய திருமந்திரத்தும்

2. "வடமொழியுந் தென்மொழியு மறைகணுன்கும் ஆனவன்"
3. "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்"
4. "செந்தமிழோ டாரியனைச் சீரியானை"
5. "ஆரியந் தமிழோ டிசையானவன்"
6. "ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயனறிகிலா அந்தகர்"
என்பன ஆதியாய தேவாரச் சுருதிகளிலும்,

7. "ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேதமுடைத் துத்தமிழ் திருவள் ளுவனு
ரோது குறட்பா வுடைத்து."

எனத் திருவள்ளுவமாலையிலும் சொல்லப்பட்டிருப்பது மேற்கூறியஉண்மையை வலியுறுத்தும்.

8. "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாசரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்."

9. "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ."

என்பர் திராவிட மாபாடிய கர்த்தர். பெரியபுராணத்துட் கூறப்பட்ட தொகையடியார்கள் ஒன்பதின்மரில் பரமனையே பாடுவார்களைச் சொல்லுமிடத்து நம்பியாண்டார் நம்பிகள்,

வகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை வல்ல வகையில்விண் டோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண்டே
உகுத்த மனத்தொடும் பாடவல் லோரென்ப ருத்தமரே.

எனக் கூறியருளினர். இதனாலும் இறைவனுக்கு இருமொழியிலும் பிரியமுண்டென்பது விளங்குகின்றது.

சேக்கிழார்சுவாமிகள், கச்சியப்பசிவாசாரியசுவாமிகள், குமாரகுருபரசுவாமிகள், தாயுமானசுவாமிகள் முதலிய அருளாளர்களும் இரண்டுபாஷையையும் பாராட்டியுள்ளார்கள். மெய்கண்டதேவர்முதலிய சித்தாந்தநூலாசிரியர்களும் இருமொழியையும் அங்கீகரித்தே நூல்செய்துள்ளார்கள். நாலாயிரப்பிரபந்தத்தில் "செந்தமிழும் வடகலையுந் திகழுநாவர் திசைமுகனே யனையவர்கள் செம்மைமிக்க அந்தணர்......" எனத் திருமங்கைஆழ்வார் என்னும் விஷ்ணுபக்தர் கூறுவர். சுருங்கச்சொல்லுங்கால் வடமொழியை விலக்கினவர்கள் ஒருவருமிலர்.

## பூருவபக்ஷம். (௨)

அங்ஙனமாக, இக்காலத்துப் புத்தறிவினர் சில்லோர், வடமொழியை மாசுள்ளதென்றும், அம்மொழிக்கணுள்ள வேதங்களும் ஆகமங்களும் ஆகிய அருணூல்கள் தமக்குரியனவல்லவென்றும், "அவ்வேதாகமங்களுக்குமுன்னேயே தமிழில் நான்மறைகளும் ஆகமங்களும் இருந்தன" என்றும் உண்மையறியா மாந்தர்களை மெய்யென்று நம்புமாறு மயக்குகிறார்கள். இக்கொள்கைக்கு மூலபுருடர்கள் திரு. கா. சுப்பிரமணியம்பிள்ளை M. A., ML., சுவாமி வேதாசலம் முதலிய சிலரே. அங்ஙனமாக, இற்றைக்குச் சிலமாசங்களுக்குமுன்னர் நூதன அறிவினர் சிலர் மேற்கூறிய இருவருடையகொள்கைகளைப் பெரும்பாலும் ஆமோதித்து, சைவமரபு தவறிப் பிள்ளையார்சுழி (உ) தானும் தம் தலையில் இடப்பெறாதனவும், பரம்பரை ஆசரணை ஆசார்யமூர்த்திகளுடைய அருட்பாக்கள் என்பவற்றுள் ஒன்றனையேனும் அடிப்படையாகக் கொள்ளாதனவுமாகிய சிறு பிரசுரங்களை வெளியிட்டுள்ளார். புதுமை பார்க்கும் சிலர் அவற்றிற்காணப்படும் விஷயங்கள் பலவும் மெய்யெனக் கொள்வாராயினர். ஆதலின் உண்மையுணர்த்திச் சைவத்தைப் பரிபாலித்தல் ஆவசியகமாயிற்று.

(1) "இருக்கு முதலிய ஆரியவேதங்களைக் கடவுள் இயற்றினாரெனக் கட்டி உரைத்தலை நீங்கள் நம்புகிறீர்களா? (2) வெறும் போலிக்கட்டுப்பாடுகளைப் புணர்த்திப் பிற்காலத்தில் எழுதப்பட்ட வடமொழி ஆகமங்களைத் தென்னாடு ஏற்காது. (3) தேவாரம் திருவாசகம் திருமந்திரம் என்னும் தமிழ்நூல்களில் ஆட்சிபெற்றுநிற்கும் வேதம் மறை என்னும் சொற்கள் இப்பொழுதுள்ள இருக்கு முதலிய வேதங்களைக் குறித்து நின்கின்றன என்று கூக்குரல் இடுதல் நாணத்தக்கது. (4) தேவாரம் திருவாசகம் திருமந்திரம் என்னும் தமிழ்நூல்களிற் சுட்டப்பட்ட வேதங்கள்—தமிழில்இருந்து மறைந்த வேதங்கள்—தொல்காப்பியர் காலத்துக்கு முற்பட்ட வேதங்கள்—இருக்கு முதலாய ஆரிய வேதங்களல்ல" என்பன ஆதியாய அவர் கூற்றுக்கள் பொருத்தமற்றன என்பதை நியாயவாயிலாக மறுக்கும் சித்தாந்தம் வருமாறு:-

## சித்தாந்தம். (௩)

நான்மறை என்று நூல்களிற் கூறப்படுவன வடமொழிச் சதுர்வேதங்களையுமேயாம். நான்மறைகள் என்று சொல்லப்படுவன தொல்காப்பியம் இறையனார் அகப்பொருள் திருக்குறள் தேவாரம் சிவஞானபோதம் என்பவற்றைக் குறிக்கும் என்றாரொருவர். அதற்கு உடன்பாடிலராய்த் தமிழ் வேதம் ஆதியில் வேறிருந்தது, அது கடலாற்கொள்ளப்பட்டது என்றார் ஸ்ரீ. கா. சுப்பிரமணியம்பிள்ளை. தொல்காப்பியம் இறையனார் அகப்பொருள் இரண்டையும் நீக்கி, திருக்குறள் தேவாரம் திருவாசகம் என்பன தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய தமிழ்நான்மறைப் பொருள்களை வழிவழியே நிலைநிறுத்திவந்த தமிழ் மறைகளாகும் எனச் சில திருத்தங்களோடு வெளியிட்டார் பின்னொருவர். வேதங்களைக் கடல்கொண்டகதை இவர்பேச்சில் இல்லை. ஆயின் தமிழில்இருந்து மறைந்ததெனப் பொதுப்படக் கூறினர். ஆகமங்களையும் கடல் கொண்டதென்றார் முன்னையவர்களுள் ஒருவர். சம

ணா அழித்துவிட்டனர் என்றார் பிறரொருவர். இவர்கள் ஒவ்வொருவரும் தம்முள் மாறுபட்டுச் சொல்லியமையே ஆதியில் தமிழ்நான்மறை இருந்ததில்லை என்பதைக் காட்டுகின்றது. திருக்குறள் தேவாரம் திருவாசகம் என்பவைகளைத் தமிழ்வேதம் என்பது உண்மை. 'மூவர்நான்மறை' என்பது போன்ற இடங்களில் அவற்றைக் குறிக்குமென்றல் பிழை. தொல்காப்பியம் இறையனார் அகப்பொருள் சிவஞானபோதம் என்பவற்றை நான்மறையெனல் கற்பனை. என்னையெனில் தொல்லாசிரியர்கள் அங்ஙனம் கூறாமையினாலும், அவை வெவ்வேறு பெயர்பெற்றுப் பெற்றதற்கேற்ற பொருளை விளக்குதலானும் என்பதாம்.

(௪) மறைகள் கடல்கோளில் அமிழ்ந்தி அழிந்தொழிந்தனவாயின் அக்காலத்துக்கு நெடுநாட்பட்டபின்னர் அவதரித்த ஆசாரியமூர்த்திகள் (௧) 'வேதத்திலுள்ளது நீறு' (௨) 'மறையின்னிசையார்' (௩) 'தூய காவிரியினன்னீர் கொண்டிருக் கோதியாட்டி' (௪) C 'வேதமும் வேள்வியு மாயினார்க்கு' (௫) 'பழைய வைதிகசைவம் பாக்கவே' என்றும் கூறியது எந்த வேதத்தையோ? தமிழில் இருந்த வேதம் மறைந்துவிட்டால், இப்பொழுதுள்ளதும் வேதம் அல்லவென்றால், சபாநாயகருடைய திருவடிகளில் சிலம்பாயொலிப்பது எது? மேலும், உத்தரவேதம் என்று திருக்குறளுக்குப் பெயர்வந்தது பூர்வவேதத்தை நோக்கியேயன்றோ! வில்லிபுத்தூராழ்வார், 'மறைநா லொடைந்தென்று நிலைநிற்கவே-மாபாரதஞ் சொன்னநாள்' என்று கூறி, வடமொழிப்பாரதத்தை வடமொழி நான்கு வேதங்களோடுசேர்த்து ஐந்தாம்வேதமென நிலைநிற்க வியாசமுனிவர் கூறினாரென்று விளக்குகிறார். உமாபதிசிவாசார்யசுவாமிகளும், 'இருக்குமுதன் மறைநான்கி னின்றுமுதலாக விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவதென்று—கருத்திருத்தி' எனப் பெரியபுராணத்தை இருக்குமுதலிய வடமொழி வேதநான்கனோடு சேர்த்து (தேவார முதலியனவேயன்றி) இதுவும் ஐந்தாவது தமிழ்வேதமெனச் சேக்கிழார் புராணத்துட் கூறியிருக்கின்றார். இன்னும் திருவள்ளுவமாலையில் நாமகள் உக்கிரப்பெருவழுதி முதலியோரும் வடமொழிவேதம் உண்டென்று பல்லாற்றானும் நிறுவியிருக்கிறார்கள்.

1. "நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு."

என்னும் நாமகள்வாக்கு வடமொழிவேதங்களையே வெளிப்படுத்துகின்றது. என்னையெனில், 'இடைப்பாரதம் பகர்ந்தேன்' என்றதனாற் பாரதம் வடமொழியாதலின் இனம்பற்றி, மறையும் வடமொழிஎன்பது தேற்றமாதலின் என்பதாம். இனித் தமிழிற்செய்யப்பட்டதோர் நூலையே கலைமகள்வாக்கு வெளிப்படுத்திற்றெனில், அதுவே முதனூலுமாய் அன்றுதொட்டின்றுவரை யாவராலும் ஆளப்பட்டுவரல் வேண்டும். கடல்கோள் அசைக்கவுமாட்டாது. ஆதலானும் மறை தமிழன்று.

2. "நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த நூன்முறையை
—உக்கிரப் பெருவழுதியார்

3. "செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதற்குரிய அந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லா தாரில்." —வெள்ளிவீதியார்.

செய்யாமொழி என்று வேதத்தை இங்கே சொல்லியது, தேவர் முதலிய பசுக்களாலே செய்யப்படாது, சுயம்புவாகிய பரமசிவனாலே செய்யப்பட்ட காரணம்பற்றியேயாம். இதனாலே வேதம் சுயம்பு என்றும் வழங்கப்படும்.

4. "—ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து." —வண்ணக்கஞ்சாத்தனார்.

[ஆரியம் வேதமுடைத்து—வடமொழி மறையையுடையது.]

அருணந்திசிவாசாரியரும் சிவஞானசித்தியாரிலே, "மறைகள் ஈசன் சொல்" என்றும்,

"ஆரணமா கமங்க ளருளினா லுருவு கொண்டு
காரண னருளா னாகிற் கதிப்பவர் இல்லையாகும்." என்றும்,

அருளிச்செய்தார். மேலும், "நான்மறை பயிலாநாட்டில் விரவுத லொழிந்து தோன்றன் மிக்கபுண் ணியந்தா னாதம்" என்றோதியருளினர். ஈண்டு வேதாகமங்கள் ஓதப்படாததேசத்திலே பிறத்தலைவிட்டு, அவை ஓதப்படும் உத்தமதேசத்திலே பிறத்தல் மிகுந்த புண்ணியவசத்தால் உண்டாகும் என்று தேசவிசேடம் கூறுதலால் அவ்வேதம் ஆகமம் என்னும் இரண்டும் என்றும் உள்ளதென்பது நன்கு பெறப்படும்.

"இக்கிரமத் தென்று மிருக்கு"

என்னும் சிவஞானபோத வெண்பாவின் பகுதியிற் கண்ட 'இருக்கு' என்பதற்கு வேதங்கள் என்று உரையாசிரியர்கள் பொருள் கண்டனர்.

சாமவேதத்தலைவர்களுள் ஒருவராகிய சைமினிமுனிவர் சிதம்பரத்தில் திருச்சிற்றம்பலத்தை வணங்கி, தாம் சிவதூஷணபரிகாரமாக இயற்றிய தோத்திரம் முதன் மூன்றுபாதமும் அவர் வாக்காகவும், நான்காம்பாதம் இப்போதுள்ள வேதமாகவும் நிலவி, வேதபாதஸ்தவம் என்று பெயர்பெற்றிருக்கின்றது. இதனைக் கோயிற்புராணத்தில் உமாபதி சிவாசாரியமூர்த்திகள்,

"சமயமலி சாமவேதத் தலைவரி லொருவ னான
சயிமினி முனிவனண்ணித் திருநடந் தொழுது வாழ்ந்து
வியன்மலர்ப் பாத மன்பால் வேதபாதத் தவத்தால்
நயமிகப் பரவியின்ப நண்ணினா னெண்ண மார"

என உணர்த்தியருளினார். [சயிமினி- சைமினி, தவம்-தோத்திரம்.]

சைவசிகாமணியாகிய நம்பியாண்டார் நம்பிகள் ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகத்தில்,

"வளமலி தமிழிசை வடகலை மறைவல" என்றும்,

"பன்மறையோர் செய்தொழிலும் பரமசிவா கமவிதியு
நன்மறையின் விதிமுழுது மொழிவின்றி நவின்றனையே" என்றும்,

"அருந்தமிழ் விரகநிற்பரசுதுந்.........உரைச்சதுர் மறையி
னோங்கிய வொலிசேர்............காழியர்நாத" என்றும்,

"வகைதகு முத்தமிழாகரன் மறையயிறிப்பிய வாசகன்" என்றும்,

வலகலை வித்தகன்......புகலிக்கரசாகிய
திருவளர் விப்பிர சிகாமணி" என்றும்,

"பலமலிதருந் தமிழின் வடகலை விடங்கன்" என்றும்,

"பயனிலவு ஞானதமிழ் விரகன் மறைஞானமுணர்
பரமகுருநாதன் மிகுபரசமய கோளரியே" என்றும்,

கூறியருளும் தெய்வமொழிகளை நோக்குமிடத்து, நம்பிகள் திருஞான சம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்த தமிழ்வேதத்தையும்; சம்ஸ்கிருதபாஷைக் கணுள்ள சதுர்வேதங்களையும் இருபத்தெட்டுத் திவ்விய ஆகமங்களையும் வேறுபிரித்துக் காட்டியுள்ளாரென்பதும், பிள்ளையாரை "முத்தமிழாகரன்," "அருந்தமிழ் விரகன்" என்றும், "வடகலை மறைஞானமுணர் பரமகுருநாதன்" என்றும் போற்றியுள்ளார் என்பதும் தெற்றெனப் புலப்படுவது கண்டு தெளிக. மறை என்பதில் ஆகமமும் அடங்குமென்பது நீலகண்ட சிவாசாரியர் கூறியவாற்றானறிக.

இன்னும் சிவநெறிச்செல்வராகிய குமரகுரு பரசுவாமிகள்,
"வடகலை தென்கலை பயிலுமலை" என மீனாக்ஷியம்மை குறத்திலும்,

"பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே"

"முதுபாட லெழுதா மறையோடு மிசைமுத் தமிழ்பாட"

"வடகலை யலபல கலையொடு தமிழ்வளருங்கூடல்' என மதுரைக்கலம்பகத்தினும்,

"வடகலை தென்கலையொடு பயிலுங் கவிவாணர்களோடிவர' என முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலும்,

"தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே"

"துறைத்தமிழொடுந் தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி" என மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழிலும்,

"எழுதாக் கிளவி நின்மொழியெனப் படுதலின்" எனத் திருவாரூர் நான்மணி மாலையினும், வடமொழி தென்மொழிகளாகிய இரு தொன் மொழிகளையும் அங்கீகரிப்பதோடு இருக்குமுதலிய வேதங்களை "முது மறை" என்றும், "எழுதாமறை" "எழுதாக்கிளவி" என்றும், "கடவுட் பழம் பாடற்றொடை" என்றும் கூறி அவைகளைப் போற்றுகின்றார்.

மேலும் வேதாந்தசூத்திரமும் இப்பொழுதுள்ள அவ்வேதங்களின் சுருக்கமே என்றும், அதற்குப் பாடியஞ்செய்த நீலகண்டசிவாசாரியர், சங்க

ராசாரியர், மத்துவாசாரியர், முதலாயினோரும் இப்போதுள்ள வேதோபநிடதங்களையே பிரமாணமாகக் கொண்டிருக்கிறார்களென்றும், அப்பைய தீக்கிதரும் சிவார்க்கமணி தீபிகைக்கு வேதோபநிடதங்களையே பிரமாணமாகக் கொண்டுள்ளாரென்றும், ஹரதத்தாசாரியர் செய்தசதுர்வேததாற்பரியசங்கிரமும் வடமொழிவேதங்களின் தாற்பரியமே என்றும் சந்தேகமின்றி உணரப்படுகின்றது.

கற்பங் கைசந் தங்கா லெண்கண்
தெற்ற நிருத்தஞ் செவிசிக் கைமுக்
குற்ற வியாக ரணமுகம் பெற்றுச்
சார்பிற் றோன்று வாரண வேதக்
காதியந் தமில்லை யதுவே நெறியெனும்
வேதிய னுரையின் விதியுங் கேட்டு

எனப் பௌத்தநூலாகிய மணிமேகலை என்னும் காவியத்திலும் கூறப்பட்டுள்ளது. படவே கற்பகம் முதலியவைகளைக் கைமுதலிய அவயவங்களாகக் கொண்ட ஆரணவேதம், ஆழிவாய்ப்பட்டழியாமல் இன்றும் நின்றும் நிலவும் ஆரியவேதமே என்பது பட்டப்பகல்போல் வெட்டவெளியாகும்.

இதுகாறும் கூறியவாற்றானே வேதசிவாகமங்கள், பரமகருணாநிதியாகிய சிவபெருமான்திருவாக்கேஎன்பதும், அவைகளே சிருட்டிஆரம்பகாலத்தில் உண்டான முதநூல்கள் என்பதும், நான்மறை தமிழில் இருந்தது எனல் கற்பனையே என்பதும், சமயாசாரியர் முதலிய எவரும் தமிழில் நான்மறை இருந்ததெனக்கூறவில்லை என்பதும், பசுமரத்தாணிபோற் பதித்துக் காட்டப்பட்டன.

## சைவத்திருமுறைகள்.

(ஙு) இனி, வேத சிவாகமங்கள் சிவபெருமானது திருவாக்கே என்று கூறும் பகுதிகள் சைவத்திருமுறைகளில் எண்ணிறந்தனவுள்ளன. அவற்றுட் சில வருமாறு:-

### திருஞானசம்பந்தசுவாமிகள்.

1. அங்கமு நான்மறையு மருள்செய் தழகார்ந்த வஞ்சொன்
மங்கையோர் பங்குடையான். —பாதாளேச்சுரம்.

2. வேதநான்கும் பதினெட் டொடாறும் விரித்தார்க்கிடம்,
—கேதாரம்.

3. தொகுத்தவ னருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்
—விற்கோலம்.

4. ஆனபாட லுகந்த திருக்கையே —திருவாலவாய்.

### திருநாவுக்கரசு சுவாமிகள்.

5. நாலுசொலா மறைபாடின தாமே —விடந்தீர்த்தபதிகம்.

6. வேதத்தோ டாறங்கஞ் சொன்னார் போலும் —ஆக்கூர்.

7. மந்திரமு மறைப்பொருளு மாயினன் காண் — திருவீழிமிழலை.

8. அங்கமாய் ஆதியாய் வேதமாகி அருமறையோ
டைம்பூதந் தானே யாகி —நின்றதிருத்தாண்டகம்.

9. அங்கங்களு மறைநான்குடன் விரித்தானிட மறிந்தோம்
—மறைக்காடு.

10. சாமவேதம் பெரிது முகப்பானை —ஏகம்பம்.

திருவாசகம்.

11. மிக்கவேத மெய்ந்நூல் சொன்னவனே.

12. பேசுவதுந் திருவாயான் மறைபோலும்.

திருவிசைப்பா.

13. சாமகண்டா அண்டவாணா

14. ஆரணம் பொழியும் பவளவாய் மணியே

திருமந்திரம்.

15. அங்கமாய அருமறை யோதியை

16. வேதமொ டாகமம் மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவும் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே.

17. அரனுரை செய்தரு ளாகமந் தன்னில்

18. முதலாகும் வேத முழுதாகம மாகப்
பதியான வீசன் பகர்ந்த திரண்டு

பதினோராந்திருமுறை.

19. வேதியனை வேத விழுப்பொரு ளானை
வேதத்துக் காதியனை —காரைக்காலம்மையார்.

20. வேதநான் காறங்கம் வேறுரைத்தமேனி விரிசடையான்
—நக்கீரர்.

21. நான்மறைகள் பகரங் கழலவனைப் பதினாயிரம்
பதிகம் வாய்மொழிந்த............காழிப்பிரான்
—நம்பியாண்டார்நம்பிகள்.

மேற்கூறிப்போந்த திருமுறைப் பிரமாணங்களினாலே வேதாகமங்கள் சிவபெருமான் திருவாக்கே என்பதும், அவைகளே நம் சமயமுத நூல்கள் என்பதும் செவ்விதிற் றுணியப்படும். அங்ஙனமாகவும் தமிழில் நான்மறைகள் இருந்தனவென்று தேவார முதலியவற்றில் கூறியிருப்பதாகச் சொல்லுதலும், எவ்வளவு சிறந்தநூல்களையும் தென்னாட்டுச் சிவத்தமிழ் மக்கள் இறைவன் அருளினரெனக் கூறமாட்டார்கள் என்று கூறுதலும் முயலுக்குக் கொம்பு மூன்றுமுழம் என்பதுபோல வெற்றுரையே யாகும்.

(சு) "தேவாரம் பாடிய மூவர்களும் ஏனையஅறிஞர்களும் எடுத்துப் பாராட்டிய ஆசமங்கள் தமிழ்ஆகமங்களேயாகும். காமிகம் காரணம் எனப் பிற்காலத்தில் வடமொழியிலெழுதப்பட்ட ஆகமங்களை அவர்கள் ஒருபோதும் கருதமாட்டார்கள்" என்பதும் குறித்த புலவருருடைய முடிபுகளுள் ஒன்று. இது அவருடைய ஆதாரமற்ற வெறும் யூகமே என்பதைக் காட்டுவாம்.

## திருமூலநாயனர்.

திருநந்திதேவருடைய திருவருள்பெற்ற நான்மறை யோகியர் ஒருவர், அகத்தியமகாமுனிவரைக் காணும்பொருட்டு, கைலாசகிரியினின்றும் தென்னாட்டிற்கு எழுந்தருளினர். திருவாவடுதுறைக்குச் சமீபத்தில் பசு மேய்த்துக்கொண்டுநின்ற மூலனென்ற பெயருடைய இடையன் மரணமடைய அதனாற் பசுக்களடைந்த துன்பத்தைப் பார்த்துத் தமது யோகவல்லமையினால் அவனுடலிற்புகுந்து பசுக்களது துன்பத்தைநீக்கியபின்னர், தாம் சேமித்து வைத்த தமதுஉடலைக் காணாது, அதற்குக் காரணம் யாதெனச் சிவயோகக் காட்சியினால் ஆராய்ந்தபோது அவர் உணர்ந்ததைக் கூறுமமையம் சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த செய்புள்:—

"தண்ணிலவார் சடையார்தாந் தந்தஆ கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ்வகுப்பக்
கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க
வெண்ணிறந்த வுணர்வுடையா ரீசனரு ளெனவுணர்ந்தார்."

என்பதாகும். இச்செய்யுளில் ஆகமம் என்றது வேதங்களையுங் குறிக்கும். எக்காரணத்தால் எனில்; நான்மறையோகியர் எனச் சேக்கிழார் சுவாமிகள் கூறுவதினலேயாம். சிவபெருமான் தமது ஐந்து திருமுகங்களினின்றும் தோற்றுவிக்கப்பட்ட ஆகமங்களைத் தமிழில் இயற்றுமாறு இவருடைய திருமேனியைக் கரப்பித்தார் என இச்செய்யுள் கூறுவதினால், இவர் முன்னர்க் கற்ற ஆகமமும் நான்மறையும் தமிழிலுள்ளன அல்ல; வடமொழியேயென்பது பெறப்படுகின்றது.

"பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலிர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்ச்செயு மாறே."

என்பது திருமந்திரத்தில் திருமூலர்வரலாறு என்பதிற் காணப்படும் செய்யுள். இப்பாடலையும் பெரியபுராணத்தில் இப்பெரியார் கைலையினின்றும் தென்றிசை புகுமுன்னர் இவரை நான்மறையோகிகள் என்று சொல்லியிருப்பதையும் நோக்குமிடத்து, முற்பிறப்பு நான்மறைக்குரிய அந்தணர்குலமென்றும், குலம் தேகத்தொடர்பு உள்ளவரையுமேயாதலின், அத்தேகத்தோடே அக்குலமும் விடுபட்டுப்போயிற்றென்றும், பின்னர் மூலனது குலமே இவர்க்கெய்தியதென்றும், அதனால் இம்முனிபுங்கவர்

"பின்னைநின் றென்னே பிறவி பெறுவது"

எனத் தமக்கு மூலனது உடலை இறைவன் கொடுத்ததுபற்றி வியந்து கூறியருளி, இறைவன் அங்ஙனம் தந்தது வேதாகமப்பொருளைத் தமிழிற் செய்யும்பொருட்டென அறிந்துகொண்டார் என்பது நன்கு விளங்கும்.

இவ்வரலாற்றுப்பிரகாரம், இச்சிவயோகிகள் மூலனென்னும் இடையனது தேகத்திற் புகுந்தபடியேயிருந்து, திருமூலரென்னும் பெயரை எய்தித் திருமந்திரம் என்னும் தமிழ்நூலை அருளிச்செய்தார் என்பது துலக்கமாம். அந்நூலில் வேதச்சிறப்பென்னும் பகுதியில்,

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே.

என்று சொல்லப்பட்டுள்ளது. இதனால், வேதத்திலே இல்லாத பொருள் இல்லை; வேதத்தை ஓதி அறிஞர் வீட்டுநெறி அடைந்தார்என்று அறிவுறுத்தியிருக்கின்றமை காண்க. அங்ஙனம் வேதமோதி வீட்டுநெறிஅடைந்தவர் உருத்திரபசுபதிநாயனர் முதலியோராம்.

ஐம்ப தெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்
ஐம்ப தெழுத்தி னடைவை அறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செ ழுத்தாமே.

என்பது திருமந்திரம். ளகரம் லகரத்துள் அடங்கும் என்பதுகொண்டு வர்ணத்துவா ஐம்பத்தொன்றும் சில ஆகமங்களிற் கூறப்படுமெனச் சிவஞான பாஷ்யம் சொல்லும். அது மேல்வரும் திருமந்திரச்செய்யுளாலும் உணரலாகும். இவ்வெழுத்துக்கள் நிகம வடமொழி எழுத்துக்களேயாம்.

"ஆதி யெழுத்தவை யைம்பதோ டொன்றென்பர்"

அகார முதலா வைம்பத் தொன்றாகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார விறுதியாய் மாய்ந்து மாய்ந்தேறி
நகார முதலாகு நந்தி நாமமே.

எனத் திருமூலநாயனர் அருளியிருப்பதினாலே வடமொழி எழுத்துக்களாகிய ஐம்பத்தொரு அக்ஷரங்களினின்று பஞ்சாக்ஷரமும் பிரணவமும் வேதாகமங்களும் தோன்றியதாக வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றது.

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச்செயு மாறே.

எனத் திருமூலமுனிவர் தமது வரலாற்றில் கூறியிருப்பதினால், இவர் தாம் கற்றிருந்த ஆரிய வேதாகமங்களின் பொருளையே, தமிழிற் கூறியருளினர் என்பது நன்கு விளங்கும்.

உள்ளுணர்வான் ஞானமுத லியவொருநான் குண்மை
தெள்ளுதீந் தமிழால் கூறுந் திருமூலர்

என்னும் சேக்கிழார்மூர்த்திகளது அருண்மொழியாலும் இது நிலைபெறுமாறு கண்டுகொள்க.

"சிவயோகத்தில் இருந்த திருமூலநாயனுர், எழுந்து.........தாம் சேமித்த சரீரத்தைக் காணுது மெய்ஞ்ஞானத்தையுடைய தமது சிந்தையினுல் ஆராய்ந்து சிவபெருமான் ஆதிகாலத்திலே தம்முடைய பஞ்சவத்திரத்தினின்றும் தோற்றுவித்த காமிக முதலிய சைவாகமங்களிலே பேசப்பட்ட மெய்ப்பொருளைத் தமிழ்நாட்டில் உள்ளவர்களுக்கு உபயோகமாகும்பொருட்டுத் தமியேனைக்கொண்டு தமிழினுலே ஒரு நூல் செய்வித்தற்கு அச்சரீரத்தை மறைத்தருளினுர் என்று தெளிந்து......சிவயோகத்தில் இருந்தார்" என ஆறுமுகநாவலர் சேக்கிழார்சுவாமிகளது கருத்தைப் பெரியபுராணவசனத்தில் நன்கு வெளியிட்டிருப்பதும் அறிக.

இதனுல் ஆரியத்துள்ள வேதங்களும் ஆகமங்களுமே சைவமுதனூல்கள் என்பதும், அவற்றைத் தந்தருளியவர் பரமசிவனே என்பதும், திருமந்திரமாலை அவ்வேதாகமங்களின் சாரமே என்பதும் திருமூலர் திருவாக்கினுலும், அருண்மொழித்தேவர் அருளுரையாலும் நன்கு நிறுவப்பட்டன. ஆகவே அவ்வருள் நூல்களாகிய வேதங்களையும் சிவாகமங்களையும் ஆரியர் கட்டென்று சொல்லுவது நம்முன்னேர் கொள்கைக்கு மாறுபட்ட பொருந்தாவுரையாயவாறு கண்டுகொள்க.

## வடமொழி மந்திரங்கள்.

(எ) மேலும், திருமந்திரத்திருமுறையிலே, அநேக பகுதிகள் வடமொழிமந்திரங்களும் பூசிக்குமுறையும் அடங்கியுள்ள திரிபுரைசக்கரம், புவனுதிபதிசக்கரம், நவாக்கரிசக்கரம், திருவம்பலச்சக்கரம், வயிரவசக்கரம், சாம்பவி மண்டலசக்கரம் முதலியவற்றைக் கூறுகின்றன. ஆகமவழிப்பட்ட மந்திரங்களும், அருச்சிக்கும் முறைகளும் திருமந்திரத்தில் உண்டென்பது நோக்குவார்க்கும் கேட்பார்க்கும் நன்கு புலப்படும்.

1. சௌமுத லவ்வொடு ஹௌவுட ஞங்கிறீம்
கௌவு ளுமையுளுங் கலந்திறீம் சிறீமென்
றெவ்வி லெழுங்கிலீ மந்திர பாதமாச்
செவ்வு ளெழுந்து சிவாய நமவெனே.

2. சட்கோணந் தன்னில் ஸ்ரீம்ஹ்றீம் தானிட்டு
வட்கோண மாறின் றலையில் றீங்காரமிட்
டெக்கோண முஞ்சூழ வெழில்வட்ட மிட்டுப்பின்
மிக்கீரெட் டக்கர மம்முதன் மேலிடே.

3. மேவிய சக்கர மீது வலத்திலே
கோவை யடைவே குரோங்சிரோங் கென்றிட்டுத்
தாவில்ரீங் காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து
பூவைப் புவனு பதியைப்பின் பூசியே.

4. ஆனந்தம்-அம்-ஹ்றீம்-அம்-க்ஷம்-ஆம்-ஆகுமே
5. ஒளியது ஹௌமுன் கிரீமது வீரும்
6. நீதங்கு மங்க நியாசந்தனைப் பண்ணிப்
7. ஆசற் றகத்தினி லாவாகனம் பண்ணி,
8. பேசிப் பிராணைப் பிரதிட்டை செய்து,
9. மேதாதி யீரெட்டு மாகிய மெல்லியல்,

10. தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம்
பகைநின்ற யோனி வகுத்தலு மாமே,

11. வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்
பொருத்தி யணிவிரற் சுட்டிப் பிடித்து
நெறித்தொன்ற வைத்து நெடிது நடுவே
பெருத்த விரலிரண்டுள் புக்குப் பேசே.

12. ................தேவியை யுத்வா கனத்தாற்
பாவித் திதய கமலம்பா வித்தக்
கியாவர்க்கு மெட்டா வியந்திர ராசனை
நீவைத்துச் சேவி நினைத்தது தருமே.

என்பன அப்பகுதிகளுட் சிலவினுஞ் சிலவாம். முழுவதும் சொல்லப்புகின் முடிவுருதென்றஞ்சி எழுதப்படவில்லை. இத்திருமந்திரப்பாடல்களில் வரும் அங்கநியாசம், ஆவாகனம், பிரதிட்டை, உத்வாகனம், நேத்திரமுத்திரை சூலமுத்திரை யோனிமுத்திரை என்பன சைவாகமங்களிற் சொல்லப்பட்ட கிரியையின் வகைகள். எட்டாத எண்ணில்வரும் மேதாதியீரெட்டு என்றது இரசகலைமுதலிய ஷோடசகலைப் பிராசாதத்தை. அம்-ஹ்றீம்-அம்-க்ஷம் முதலியன வடமொழி மந்திரங்கள்.

இங்கே எடுத்துக்காட்டப்பெற்ற அருமைத்திருவாக்குக்களினாலே, யந்திரம் அமைக்கும் முறைகளும், அச்சக்கரங்களில் அக்ஷரங்களைப் பதிக்கு முறையும், யந்திரப்பிரதிட்டைசெய்தல் ஆவாகனம்செய்தல் பாவனைசெய்தல் முதலிய கிரியைகளும், யந்திரபூசைசெய்வதனால் வரும் பயனும் திருமந்திரத்திற் சொல்லப்பட்டுள்ளன என்பதும், அங்கே எடுத்தோதப்பெறும் மந்திரங்கள் எல்லாம் வடமொழிமந்திரங்களே என்பதும் தெளிவாக விளங்குகின்றன. இவற்றை விரித்தோதும் நூல்கள் காமிகம் முதல் வாதுளமிறுதியாகிய சிவாகமங்களேயாம். சிவாகமங்களைக் கொண்டன்றி வேறு எவ்வாற்றானும் இவற்றை விளங்கிக்கொள்ளுதல் இயலாது. சைவப்பலவராகிய பெரியாரொருவர் தாம் திருமந்திரத் திருமுறையை உத்தமநூல் என்று விசுவசிப்பது உண்மையேயாயின். "வடமொழிமந்திரத்தால் இறைவனைக் காண்போமென்று மார்புதட்டிப்பேசியது அந்தக்காலம்" என்றுபேசும் விபரீத உரையை ஒழித்து இறைவனை வழிபடும் எல்லாருக்கும் எந்தக்காலத்தும் வடமொழிமந்திரங்கள் வேண்டப்படும் என்னும் உண்மையை உணர்ந்து திருத்தமுறக்கடவர்.

## பொதுமொழி.

(அ) வடக்கே இமாசலம்முதல் தெற்கே கன்னியாகுமரியீறாகியுள்ள புண்ணியதேசத்திலே அநேகபாஷைகள் வழங்கிவருகின்றன. அம்மொழிகள் வழங்கிவரும் எல்லாநாடுகளிலும் எண்ணற்ற சிவாலய விஷ்ணு ஆலயங்கள் பூர்வீகமாகவே தோன்றி நிலைபெற்று விளங்குகின்றன. அத்தலங்களிற் சென்று வெவ்வேறு நாட்டவராகிய வெவ்வேறு பாஷையாளர்கள் பண்டு தொட்டு வழிபாடுசெய்துகொண்டே வருகிறார்கள். இமாசலத்தின்மீது விளங்கும் திருக்கேதாரம் பத்ரிநாராயணம் என்னும் தலங்களில் அந்நாட்டவரும் மற்றைய என்னாட்டாரும் அருச்சனை செய்விப்பது ஆரியத்துள்ள புராணங்களிற் சொல்லப்பட்ட அஷ்டோத்தர சத சகஸ்ரநாமாதி மந்திரங்

களைக் கொண்டேயாம். இந்துஸ்தானிவழங்கும் காசிப்பதியிலும், பெங்காளபாஷை வழங்கும் கற்கத்தா காளிகட்டத்திலும், குஜராத்தி வழங்கும் பம்பேநகரத்தருகிருக்கும் சோமநாதபுரத்திலும் அவ்வாறே. துளுவமொழி வழங்கும் திருக்கோகர்ணத்திலும், தெலுங்குமொழி வழங்கும் திருப்பருப்பதத்திலும், கன்னடபாஷை வழங்கும் மைசூர் நாட்டிலுள்ள தலங்களிலும் மலையாளமொழிவழங்கும் நாட்டிலுள்ள ஆலயங்களிலும், தமிழ்நாட்டில் காஞ்சி முதல் இராமேச்சரம் இறுதியாகவுள்ள தலங்களிலும் அருச்சனைகளிற் பிரயோகிக்கப்படுவது ஆரிய மந்திரங்கள் என்பது பிரத்தியக்ஷம். நமது ஈழத்திலும் அவ்வாறே. மேலும் நமது தமிழ்நாட்டுச் சிவத்தலங்களிலும் விஷ்ணுத்தலங்களிலும் ஏனைநாடுகளிலுள்ள இவ்விருவகைத் தலங்களிலும் பிரதிஷ்டை, உற்சவம், பூசை என்பன வடமொழிவேதங்களிலும் வடமொழிச் சைவ வைஷ்ணவ ஆகமங்களிலும் கண்டவாறே அம்மொழியானியன்ற வாக்கியங்கள் மந்திரங்களைக்கொண்டே நடந்துவருகின்றன. இன்னும் தமிழ்நாட்டிலும் மற்றையநாடுகளிலுமுள்ள சைவ வைஷ்ணவ மடங்களிலும் நித்திய நைமித்திக அநுட்டானங்கட்குத் தமிழ்த்தேசிகமூர்த்திகளும், ஏனையோரும் பண்டுதொட்டுக் கைக்கொண்டுவருவதும் ஆரியபாஷா மந்திரங்களேயாம். சைவத்தேசிகர் என்ற குருமாரும் தமக்கும் பிறருக்கும் சுபாசுபங்களில் ஓதும் வாக்கியங்கள் மந்திரங்கள் தமிழிலல்லாது ஆரியமாயே இருப்பதாலும், சமய விசேட நிருவாண ஆசார்யாபிஷேக விதிகளெல்லாம் தொன்றுதொட்டே ஆரியத்தில் அமைந்து அவ்வாறே நடைபெற்று வருவதாலும். சைவவேளாளர்கள் பாரம்பரியமாக அநுசரித்துவரும் சிவபூஜைக்கு இன்றியமையாதனவாகிய பஞ்சப்பிரமமந்திரம் சடங்கமந்திரம் பதமந்திரம் சிவகாயத்திரி முதலிய மந்திரங்களெல்லாம் ஆரியமாகவே நிலைபெற்றிருப்பதாலும், பதினொருமந்திரம், ௮௧ பதம், ௫௧ அக்ஷரம், ௨௨௪ புவனம், ௩௬ தத்துவம், ௫ கலை என்னும் ஆறத்துவாக்களும் கலாசோதனையில் நியசிக்கப்படுவதாலும், மந்திரம் பதம் அட்சரம் புவனம் தத்துவம் கலை என்னும் ஆறத்துவாக்களும் இல்லாவிடின் நிருவாணதீக்ஷையே நிகழப்பெறாது ஆதலானும், நமது நாட்டில் ஆரியமொழியானது தான் உற்பத்தியானகாலந்தொட்டு நிகழ்ச்சிபெற்றே வருகின்றதென்பது தாபிக்கப்படும். அத்துவாக்கள் ஆறினையும் திருமூலநாயனார்,

"தத்துவ மாறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னமைம் பானொன்று மேதினி
யொத்திரு நூற்றிரு பானான்கெண் பானொன்று
வைத்த பதங்கலையோ ரைந்தும் வந்ததே"

என்பதனாற் கூறியருளினர். இங்கே மனு (மந்திரம்) ஏழுகோடி என்றது பதினொருமந்திரங்களின் அந்தங்களையேயாம். அந்தங்களைச்சொல்லி பதினொரு மனுக்களைத்தாமே தோன்றவைத்தார் திருமூலர். அத்துவசுத்தி இவ்வாறென்பது "அழிவிலாக் கிரியையினா னுதல்" எனவரும் சித்தியார் ௮. ௧-௯ல் அறிக.

(௯) இன்னும் சிவாக்கிரயோகிகள் செய்த சிவநெறிப்பிரகாசத்தில் வரும் "ஏற்றியிடு மீரெட்டாய் அகாராதி உயிரை" என்ற செய்யுட்கு நந்தி சிவாக்கிரயோகிகள் எழுதிய உரையில் "பதினாறாகச்சொல்லப்பட்ட அகாராதி உயிரெழுத்தை நித்தியமாயிருக்கிற சிவன் அதிட்டிப்பன். இந்த உயி

ரெழுத்துக்களுக்கு உடலாகச்சொல்லப்பட்ட ககராதி முப்பத்தைந்தைச் சத்தியானவர் பொருந்தி அதிட்டித்திடுவர். இந்தச் சத்தி சிவர்கள் அதிட்டிக்கச் சூக்குமை வாக்கு முதலான சகல பிரபஞ்சமுமுண்டாம். ஆகையினுல் நின்மலராயிருக்கும் சிவனுக்குப் பேர் வாகீசரென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். வாகீசுவரி என்று சொல்லப்படாநின்ற பெயர், வாகீசுவரன் என்று சொல்லப்பட்ட சிவனுடைய சக்திக்காம்" எனக் கூறப்பட்டுள்ளது. இதனை நோக்குமிடத்து உயிரெழுத்துக்களை நிலைக்களமாகநின்று செலுத்துபவர் சிவன் என்றும், மெய்யெழுத்துக்களை அங்ஙனம் செலுத்துபவர் சத்தியே என்றும், அவ்வெழுத்துக்கள் வடமொழிக்கண் உள்ளன என்றும் அறிந்துகொள்ளற்பாலதாம்.

(௧0) ஆரியமொழியானது எல்லாத் தேயத்திற்கும் விண்ணுலகமுதலியவற்றிற்கும் பொதுமொழியாம் என்ற கருத்தைச் சிவஞான சுவாமிகள் நன்னூல் விருத்தியுரைத் திருத்தத்தில் பின்வருமாறு விளக்குகிருர். அதை நோக்குவார்க்கு உண்மை தெற்றெனப் புலப்படும்.

"வடக்கும் ஒருதிசையன்றே திசைச்சொல்லன்றி வடசொல்லென வேறுகூறுவதென்னையெனின்:—தமிழ்நாட்டிற்கு வடதிசைக்கட் பதினெண் மொழிகளுள் ஆரியமுதலிய பல மொழியுமுளவேனும் தென்றமிழ்க் கெதிரியது கடவுட்சொல்லாகிய வடமொழியொன்றுமேயென்பது தோன்ற அவற்றுட் டமிழ்நடை பெற்றதை வடசொல்லென்றும் ஏனையவற்றுட் டமிழ்நடைபெற்றதைத் திசைச்சொல்லென்றுஞ் சான்ருேரால் நியமிக்கப்பட்டனவென்க. அன்றியும் ஆரியச்சொல் எல்லாத்தேயத்திற்கும் விண்ணுலகமுதலியவற்றிற்கும் பொதுவாகலான் அவ்வாரியச் சொற்றமிழ் நடைபெற்றதைத் திசைச்சொல்லென்றல் கூடாதெனக் கோடலுமாம், அங்ஙனமாயின் வடசொல்லென்றதென்னையெனின்; ஆண்டுப் பயிற்சி மிகுதிபற்றியெனக் கொள்க" என்பதாம்.

சென்னை சர்வகலாசாலைத் தமிழாராய்ச்சித்துறைத்தலைவர் சு. அனவரத விநாயகம்பிள்ளை M. A. L. T. அவர்கள் இக்கருத்துக்கொண்டே "மற்று, பழைமையான சைவசமயசாஸ்திரங்கள் ஸம்ஸ்க்ருத மொழியிலேயே எழுதப்பட்டிருக்கின்றன. ஸம்ஸ்க்ருதமொழி ஒருசாதியார்க்கு உரியமொழி என்பது ஆராய்ச்சியுடையார் உரைக்குங் கூற்றன்று. ஸம்ஸ்க்ருதமொழி பரத கண்டத்தில் சமயஉணர்ச்சிமிக்க அனைத்துச்சாதியாரும் தம் கொள்கையை உலகிற்கு வெளியிடற்குத் தெரிந்துகொண்டமொழி........." என எழுதியுள்ளதும் என்றறிக. இது சிவநெறிப்பிரகாச முன்னுரையிற் கண்டது.

இங்ஙனம் இருப்பவும், "அறிவில்லாது ஆரியம் ஆரியம் என்று ஆலோலம் பாடுகின்ற சிவசைவத் தமிழர்கள்" என்று ஆரியத்தோடு சேர்த்துத் தமிழரையும் இழுக்குப்படப்பேச முற்பட்டசெயல் விரும்பத்தக்கதன்ரும்.

வடமொழியும் தமிழும் எமக்குரிய பாஷைகளேயாம். உமாபதிசிவாசாரியசுவாமிகளும் திருத்தொண்டர் புராணசாரத்தில், "அருந்தமிழால் வடகலையா லருளா லொன்ரு லறிவுநெறி மருவுங் கவிகள் யாவும் — திருந்திய வானவர் பணிய மன்றுளாடுந் தேவர்பிரான் கழலிணையே சேரவோதி...... பரிந்தருளாற் பரமனையே பாடவல்ல பான்மையா ரெமையாளு மேன்மை

யாரே" எனப் பரமனையே பாடுவாரைக் கூறியுள்ளதும் காண்க. வடமொழி வேதாகமங்களே முதனூல்களென்று ஆன்றோர்களால் நிலைநிறுத்தப்பட்டமை முன்னரும் காட்டினும். "ஆதியவருமறையீர்" "தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிற்சேர" என வரும் திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாக்குகளும் காண்க.

மேலும், சேக்கிழார்சுவாமிகள் "வேதவா ரணமேற் கொண் டிருந்தன... பூத நாதநின் புண்டரீ கப்பதம்" "அல்லநீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்கால் தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியே னென்று" மறைகளாயினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றிநின்ற-இறைவனைத் தொடர்ந்து பற்றி" "மறைகளு முழங்கி யார்ப்ப" "ஓதுமறை யோர்பிறி துரைத்திடினு மோவா-வேதமொழி யாலொலி விளங்கியெழு மெங்கும்" "அருமறை நான்கினோ டாறங்கமும் பயின்று வல்லார்" "எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்ப......சிவகோசரியார்" "மன்னியவா கமப்படியான் மாமுனிவ ருச்சித்து" என்பனவாதியாகக்கூறும் அருள்வாக்குக்களினாலே வடமொழி வேதாகமங்களையே அருள்நூல்களெனக் கைக்கொண்டமை தெளிவாக விளங்குகின்றது.

## வடமொழியை ஒதுக்கித் தருவானேன்.

வடமொழி தமிழ்என்றகேள்வி இப்பொழுது நமக்குட் புகுந்து நம்மை அளவுக்குமீறி அலைக்கிறது. அரசாங்க உத்தியோகப்பற்றுக்களிலும், சின்னாள் உலகவியாபாரங்களிலும் உழலும் ஆசிரியர்களுக்கும் பிறர்க்கும் சண்டையும் இகலும் உளதாயின் அது அவர்கள் உயர்வாய்க்கொள்ளும் மொழியாகிய வடமொழியையும் அதிற்கண்ட நூல்களையும் பற்றியது. இவர்களைப்பற்றிய குரோதம் ஆடும் ஓநாயும் கொண்டகதைபோல இவர்களின் முன்னோர்களையும் பிடித்து அவ்விரோதங்காரணமாகச் சச்சரவுகளுக்கு இடமுண்டாக்கிவிட்டது நமது துர்ப்பாக்கியம். வடமொழி என்ற வாடைதானும் பலர்க்குத் துவேஷமாயிற்று. நேற்றுவந்த ஆங்கிலத்தைக் கைக்கொண்டு பயன்பெற முயலும் இந்நாள்மக்கள் பல்லாயிரம் ஆண்டுகளாய்த் தமிழகத்திலே உடன் பயின்று நமக்குப் பல ஞானங்களை உதவிய வடமொழியை வெறுப்பானேன்? அப்படி வெறுப்பானல் அவ்வடமொழியையும் நூல்களையும் நூன் முடிவு முதலியவற்றைபும் கைக்கொண்டு ஒழுகி நம்மையும்படைத்து நமக்கு அளவில்லாத தமிழ்ப்பண்டாரங்களைத் தேடிவைத்த நமது தமிழ் மூதறிஞர்களையுங்கூட அன்றோ வெறுத்து, ஒதுக்குதல் வேண்டும்.

ஐயோ! "தொல்காப்பியர், சைவசமயாசாரியர்கள், புராணிகர்கள், தாயுமானர், குமரகுருபரர், சிவஞானமுனிவர் ஒருவரும் தப்பி நமக்கு எஞ்சிநிற்கமாட்டார்களே! வடமொழியைப் பார்ப்பனருக்கு ஒதுக்கித் தருவானேன்" என்றிவ்வாறு சிவக்கவி C. K. சுப்பிரமணியமுதலியார் B. A. சொல்லுகிறார்கள்.

சைவசித்தாந்தசாஸ்திரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உதவிய மகானுபாவரும் ஏனைச் சமயக்கொள்கைகளையெல்லாம் நன்குணர்ந்தவருமாகிய J. M. நல்லசாமிப்பிள்ளையவர்கள் B. A., B. L. பின்வருமாறு எழுதுவது சைவமக்கள் ஒவ்வொருவரும் உளங்கொளவேண்டியதாகும்.

"தமிழிலும் சஸ்கிருதத்திலும் உள்ள சைவநூல்களையெல்லாம் ஆராய்ந் தாலன்றிச் சைவசித்தாந்தத்தின் அருமை புலப்படாது. சம்ஸ்கிருத அறி வினரின் தப்பபிப்பிராயம் அவர் தமிழறிவாற் திருத்தமடையும். அஃதே போல் தமிழ்ப்பயிற்சியுடையவரின் அவிரோதக்கொள்கை சம்ஸ்கிருத அறி வால் மாற்றம்பெறும்.........................நமது சமயாசாரியர்களும் சந்தான சாரியர்களும் மற்றும் பழைய தமிழ் உரையாசிரியர்களும் வடமொழியிற் பெரிதும் பாண்டித்தியமுள்ளவர்களென்பதை யாம் மறக்கக்கூடாது. அரு ணந்திசிவாசாரியர் சகலாகம பண்டிதராய் விளங்கியவர். உமாபதிசிவம் பௌஷ்கராகமத்திற்குப் பெரிய வியாக்கியானம் ஒன்று வடமொழியிற் செய்தவர். அருணகிரிநாதர் தாயுமானவர் முதலியவர்களின் பாடல்கள் வடமொழிக்கலப்புப்பெரிதுமுடையவை. இதனால் இவைகளின் சிறப்புக் குறையுந்தாத்ததன்று.

இனி திருநெல்வேலிஜில்லா டிஸ்திறிக் கோர்ட்வக்கீல், அம்பாசமுத் திரம் V. P. காந்திமதிநாதபிள்ளை B. A., அவர்கள் "வடமொழி எந் தச் சமுதாயத்தாருக்கும் சொந்தமொழியன்று. நம் இந்திய நாட்டிலுள்ள எல்லாச் சமுதாயங்கட்கும் இது பொதுமொழி என்பதை இவ்விருமொழி களிலுமுள்ள இலக்கண இலக்கியநூல்கள் வற்புறுத்தி உணர்த்துகின்றன. பண்டைக்காலந்தொட்டு இந்நாள்வரை இவ் வடமொழி எல்லாச் சமுதா யத்தார்களின் ஆட்சியிலுமிருந்துவருகிறது. நமது சைவ நிலயங்களாகிய ஆலயங்களிலும் ஆதீனங்களிலும் இற்றை நாள்வரை ஆட்சி செலுத்திவரு கின்றது. நமது தமிழ்மக்களின் அனுட்டானம், பூஜை, சமயச்சடங்குகள் முதலிய அனைத்திலும் கையாளப்பட்டு வருகிறது!........ஹர்ஷகவி என் னும் வடமொழிஆசிரியரும் சேனவரையர் முதலிய தமிழ்இலக்கண ஆசிரி யரும் வடமொழியைப் பொதுமொழிஎன்றல் சரித்திரஆராய்ச்சியில் இடந் தராதா? ஆகவே வடமொழியை வேறுசமுதாயத்தார்மொழி என்ற பொ ருந்தாக் கொள்கையைச் சைவநன்மக்களும் தமிழ்நன்மக்களும் ஒழித்து விடவேண்டுமன்றோ? என்று எழுதுகிறார்கள். இக்காரணங்களைக் கொ ண்டு பார்க்குமிடத்து, பண்டிதர் வித்துவான் புலவர் என்ற நிலைமையில் உலகினர்க்கு நல்லுணர்வூட்டவேண்டியவர்களாகத் தாங்கள் இருந்தும் அதற்குமாறாக "வடமொழியுடன்உறவாடி சைவத்துக்கும்தமிழுக்குமுள்ள பொருத்தத்தைச் சிதைக்கவேண்டாம்" என்றெழுதியது வருந்தத்தக்க தே.

## அத்துவாவடிவம்.

(கக) இறைவனுக்குக் கருணையாற்கொள்ளும் வடிவமேயன்றி எவற் றுடனும் கலந்து உடனாய்நிற்கும் எதுவால் அத்துவாக்களும் வடிவமென்று ஆகமங்களிலெல்லாம் உபசரித்து உரைக்கப்படும். அது சிவஞானசித்தியார் க-உ-டுகூ ல்

அத்துவா மூர்த்தியாக வறைகுவ தென்னை யென்னில்
..........................................................
வைத்ததா மத்துவாவும் வடிவென மறைக ளெல்லாம்

என்று கூறப்பட்டதினால் அறியலாம். இதற்கு வாதுளாகமத்தும் பிரமசம்பு பத்ததியினும் காண்க என்றார் மறைஞானதேசிகர். அத்துவாவடிவமான

முறை எங்ஙனமெனில் பஞ்சகலைகளும் அங்கமாகவும், புவனம் உரோமமும் வன்னம் தோலும் மந்திரங்கள் சோரியும் பதங்கள் நரம்பும் தத்துவம் என்புந் தசையுமாகவும் பொருந்தும் என்பதறிக. இதற்கடுத்த செய்யுள் இரண்டும் இறைவனுக்கு அத்துவாக்களுள்ளும் மந்திரவடிவம் சிறந்தது என்றும் மந்திரங்களுள்ளும் பஞ்சப்பிரமமந்திரவடிவத்தை ஆகமங்கள் சிறந்தெடுத்து ஓதுகின்றன என்றும் சொல்லப்பட்டுள்ளது.

## மந்திரவடிவம்.

மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேணீ
முந்திய தோற்றத் தாலு மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே.

இதன்விளக்கம் மிருகேந்திரம் கிரணம் வாதுளம் பௌஷ்கரம்முதலிய ஆகமங்களால் அறிந்துகொள்ளத்தக்கதாம். அதனை, மறைஞானதேசிகர் உரையால் அறிக.

ஆகமசாரமாகச் சகலாகமபண்டிதர் அறிவுறுத்தருளிய திருமொழிகளைச் சைவப்புலவர் வரவேற்று மகிழ்ந்துகொள்வாரா? அன்றிப் புறக்கணித்துத் தூற்றுவாரா?

மந்திரங்க ளொருகோடி சுவாகா வென்று
மருவு நமவென்றும் வசட்டுவௌஷட் டென்றும்
முந்து சுவதாவென்று மும்மென்றும் பட்டென்று
முதிக்கு முதலெழு கோடியாம்.

எனத் தத்துவப்பிரகாசம் மந்திரங்களின் அந்தமாகிய சுவாஹா, நம:, வஷட், வௌஷட், சுவதா, ஹூம்பட் என்பவற்றைக் கூறிற்று. இன்னும், இவை போன்ற மந்திரப்பொருள்கள் சைவப்பெருமக்கள் அருளிச்செய்த நூல்களால் உபதேசமுறைபற்றி அறியத்தக்கன. விரித்தெழுதுதற்கு இது இடனன்று.

## தேவாரம்-திருவாசகம்-திருமந்திரம்.

(கஉ) தேவாரம் திருவாசகம் திருமந்திரம் என்னும் தமிழ்நூல்களில் சுட்டப்படும் வேதங்கள்— இருக்கு முதலாய ஆரியவேதங்கள் அல்ல என்பது சைவப்புலவர் முடிபுகளில் ஒன்று. அது பொருந்துமா என்பதை ஆராய்வாம்.

"வேதமொ டாகமம் மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக"

என அகத்தியமுனிவர் காலத்தவராகிய திருமூலமுனிவரும்,

"தொகுத்தவனருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்"

எனத் திருஞானசம்பந்த சுவாமிகளும்,

"ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க"

எனத் திருவாதவூரடிகளும் அருளினர்கள். இவ்வருட்பாக்களினால் வேதம் பொது நூலென்றும், ஆகமம் சிறப்பு நூலென்றும் இவ்விரண்டினுக்கும் கருத்தா பரமசிவனே என்றும், அருமறையைத் தொகுத்தும் அங்கத்தையும் ஆகமத்தையும் விரித்தும் அருளினர் என்றும் அறியப்படுகின்றன.

"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லனாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினா லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்குநிகழ்த்தியது" என்றும்,

"அநாதியே யமலனாய வறிவனூலாக மந்தான்"

என்றும் சகலாகமபண்டிதராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்ததும் மேற்கூறிய உண்மையை வலியுறுத்துகின்றன. காமிகாகமம் சுவாயம்புவ ஆகமம் மோகசூரோத்தரம் இரத்தினத்திரயம் முதலியவைகளும் இவ்வாறே கூறுமென்றறிக. ஆகவே திருமந்திர முதலியவற்றில் சுட்டப்பட்ட மறைகள் ஆரிய வேதங்களே என்பதும், ஆகமங்கள் வடமொழியின்கணுள்ள காமிகாகமம் முதலியவைகளே என்பதும் அறிஞர்களால் அங்கீகரிக்கப்பெற்ற உண்மையாகும்.

## வேதாகமங்கள் சம்ஸ்கிருதத்தில் உள்ளன.

(கரு) சைவசமய முதனூல்களாகிய நான்கு வேதமும் இருபத்தெட்டாகமும் வடமொழியேயென்பது சிவஞானசித்தியார் பரபக்கத்தில்,

"காரியமா யுலகமெலா மிருத்த லாலே
கடாதிகள்போற் காரியகர்த் தாவொருவன் வேண்டும்
ஆரியமா யறம்பொருளோ டின்பவீ டெல்லாம்
மறைந்துயிர்கட் கறிவுசெய லளிப்பது நூலந்நூல்
கூரியரா யுள்ளவர்க ளோத வோதிக்
கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச்
சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டுஞ்
செயலினுக்குங் கரிவேண்டும் சிவனுளனென் றறியே."

என வரும்செய்யுளால் அறியலாம். இதற்குத் தத்துவப்பிரகாசசுவாமிகள் செய்தஉரை வருமாறு:-

"வடமொழியாய் அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு காரியமுஞ் சொல்லி, ஆன்மாவுக்கு அறிவையுஞ் செயலையுங் கொடுப்பது வேதாகமங்கள். அவ்வேதாகமங்கள் பிரமாதிகள் ஓதுவிக்க மகாஇருடிகளாலே ஓதப்பட்டு, அவர்கள்வழியாகத் தொன்றுதொட்டு வருதலால், தவறின்றி மிக்கபெரிய அறிவுடையவராலே சொல்லவேண்டும். அவ்வேதாகமங்களாலே சொல்லப்பட்ட கன்மத்துக்குக் காண்பானொருசாட்சி வேண்டும். ஆகையாலே சிவனாலே நூல் செய்யப்பட்டதென்றும் அவனே கருத்தாவென்றும் அறிவாயாக" எனவருவதும் நோக்கி உணரத்தக்கது. இச்செய்யுளில் சகலாகமபண்டிதராகிய அருணந்தி சிவாசாரியசுவாமிகள் காரண காரியங்களைக் கொண்டுசாதித்து, அறமாதி நான்கையும் அறைவன வேதசிவாகமங்களே என்றும், அவை வடமொழியானவை என்றும், அவை தொன்றுதொட்டு ஓதப்பெற்று இருடிகள்வழியாக எங்களுக்குவந்து இன்றும் நிலவுகின்றன என்றும் தெளிவாக விளக்கியிருப்பதும் கண்டுகொள்க.

பரமசற்குருநாதராகிய, ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள்.

"ஆகமத்தொடு மந்திரங்களமைந்த சங்கதம்" என்ற திருவாலவாய்த் தேவாரப்பகுதியில் சிவாகமங்களும் வேதமந்திரங்களும் அமைக்கப்பெற்ற

சம்ஸ்கிருதபாஷை என்று பொருள்படச்சொல்லியருளினர். இதனால் வடமொழியிலேயே வேதங்களும் சிவாகமங்களும் உள்ளன என்ற உண்மை தெள்ளிதிற் புலப்படுகின்றது. இன்னும், வண்ணக்கஞ் சாத்தனர் என்ற மெய்ப்புலவரும்,

—"ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனு
ரோது குறட்பா வுடைத்து"

என ஆரியமொழியிலே வேதமுள்ளதென்று தமது கருத்தை வெளியாக்கினர். மேலும் அகத்தியமுனிவர் காலத்தவராகிய திருமூலநாயனர்,

"ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்."

என வடமொழி எழுத்துக்களானுபவை வேதங்களும் ஆகமங்களுமெனக் கூறியிருத்தலினாலும்,

"இருக்கு ருவாமெழில் வேதத்தி னுள்ளே."

என வேதத்தையும்

"பெற்றநல் லாகமங் காரணங் காமிய
முற்றநல் வீரமுயர் வாதுளஞ் சிந்திய
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்திரத்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே."

என வடமொழிக்கணுள்ள ஆகமங்களையும் எடுத்தாளுவதனாலும் வேதாகமங்கள் ஆரியத்திலே உள்ளன என்று மலையிலக்காக விளங்குகின்றது.

முத்தமிழ்விரகராகிய ஸ்ரீஞானசம்பந்தப் பிள்ளையாரும், சகலாகமபண்டிதரும், திருமூலயோகிகளும், பிற சிவாநுபூதிச் செல்வர்களும் சங்கத (ஸம்ஸ்க்ருத)பாஷையில் வேதங்களும்ஆகமங்களும் அமைந்துள்ளன எனக் கூறியமையானன்றே, நமது ஆறுமுக நாவலரும், சைவதூஷணபரிகாரத்தில் "இச் சாத்திரங்களெல்லாம் மூலபாஷையாகிய சம்ஸ்கிருதத்திலுள்ளவாம்" எனக்கூறினர் என்றுணர்க.

எனவே தேவாரம் திருவாசகம் திருமந்திரம் என்னும் தமிழ்நூல்களில் சுட்டப்படும் வேதங்கள் ஆரியவேதங்கள் அல்ல என்ற முடிபு வெறுங் கட்டுக்கதையாயவாறு கண்டுகொள்க.

## சிவஞானமுனிவர்—சிவஞானபோத பாடியம்.

(கசு) வேதசிவாகமங்களின் உற்பத்தியைச் சொல்லுமிடத்து, சிவஞானமுனிவர் சிவஞான பாடியச் சிறப்புப்பாயிர உரையில் கூறுவதை இங்கே காட்டுதல் நன்மைதரும். அவர்கள் கூறுவதாவது:—

"மகாசங்காரகாலமுடிவின்கண் உலகங்களை மீளப் படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையைநோக்கியவழி வேதாகமங்கள் குடிலையினின்றும் நாதவடிவாயும் அதன்பின் விந்துவடிவாயும் முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்ப்படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கு அருளிச்செய்தற்பொருட்டுப் பரமசிவன் ஈசானமுதலிய பஞ்சப்பிரம மனுக்களாகிய சத்திகளை திருவடிமுதலிய அவய

வங்களாகச் சகளநிஷ்களத் திருமேனிகொண்டருளிச் சதாசிவமூர்த்தியாய் நின்று தற்புருஷமுதலிய நான்குமுகங்களால் வேதங்களைத்தோற்றுவித்து, மேற்கண்ணதாகிய ஈசானமுதலாகிய ஐந்து திருமுகங்களாலும் காமிகமுதலிய இருபத்தெட் டாகமங்களையுந் தோற்றுவித்து, வேதங்களை அநந்ததேவர்வழியானே பிரமனுக்கருளிச்செய்து, சிவாகமங்களைப்பிரதிசங்கிதை முறையானே பிரணவர் முதலிய பதின்மரும் மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய இருபத்தெண்மருக்கும் சிவபேதம் உருத்திரபேதம் எனப் பகுத்து, ஒரோவொன்று ஒவ்வொருவருக்கு அருளிச்செய்து, பின்பு மகௌகமுறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தியேசர் எண்மரின் முதல்வராகிய அநந்ததேவருக்கு அருளிச்செய்தார். அவற்றை அநந்ததேவர் நூற்றுப்பதினெட்டு உருத்திரரின் முதல்வராகிய ஸ்ரீகண்ட ருத்திரருக்கு அருளிச்செய்தார். அவற்றைக் கணங்கட்கும் தேவர்கட்கும் முனிவர்க்கும் அளித்தற்பொருட்டு முதற்கண் நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார். இது சிவாகமம் வந்த வரலாறென உணர்க'' என்பதேயாம்.

மேலும், சிவஞானபோதத்துப் பிரமாணவியல் க-ம் சூ, க-ம் அதிகரணத்தில், வேதம் பரமசிவனாற் செய்யப்பட்டதென மறுபடியுங் கூறி, அதற்கு உபநிஷத்து வாக்கியத்தைப் பிரமாணமாகக்காட்டினார். உ-ம் சூத். உ-ம் அதிகரணத்தில் வேதஞ் சிவாகமம் இரண்டுஞ்செய்த முதற்கர்த்தா பரமசிவனே என்றும் கூறினர் சிவஞானயோகிகள்.

(கடு) சிவஞானசித்தியாரில் "வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்'' என்று தேற்றம்பெறக் கூறப்பட்டுள்ளது. அச்செய்யுளுக்கு சிவஞானமுனிவர் "முதல்வன் பெருங் கருணையாளனாதலின் உலகத்தார்பொருட்டும் சத்திநிபாதமுடையார் உய்தற்பொருட்டும் திருவுள்ளத்திற்கருதிப் பொருள் பலபடத்தோன்றும் சூத்திரமும் அதனை அவ்வாறாகவொட்டாது தெளித்துரைக்கும் பாடியமும்போல முறையே வேதமும் சிவாகமமுஞ் செய்யப்பட்டனவாகலான் அவையிரண்டும் முறையே பொதுநூல் சிறப்புநூல் எனப்பட்டு, சூத்திரமும் பாடியமும் போல வேறுவைத் தெண்ணப்பட்டன.'' எனவுங் கூறியிருக்கின்றார். இவ்வுரைப் பகுதிகளை நோக்குமிடத்து, சிவஞானமுனிவர் வடமொழி நான்கு வேதங்களையும், வடமொழியிலுள்ள காமிகாதி இருபத்தெட்டாகமங்களையுமே நம் சைவமுதனூல்களென்று அறிவுறுத்தியிருப்பது வெளிப்படை.

## ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்.

(கசு) ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரைப் பற்றியும் நவீனர்கள் பின்வருமாறு ஆராய்கிறார்கள். 'ஆறுமுகநாவலர் அந்தக்காலப் போக்குடன் ஒட்டி ஆரியரின் காமிகம் முதலான ஆகமவளக்குகளையும் அப்படியே எழுதிவைத்தார். ஆரிய வேதங்களையும் ஆகமங்களையும் ஆராய்ந்தமுடிபுகள் அறிஞர் உலகில் ஆட்சி பெற்றிருக்கும் இக்காலத்தில் இருந்தால் அப்படி ஏற்கமாட்டார் என்று சொல்லுகிறார்கள். இக்கூற்றாற் பெறப்படுவது என்னெனில், ஆறுமுகநாவலர் வேதாகமங்களைப் பிரமாணமாகக் கொண்டது பிழையென்பதேயாம்.

இவர்கள் கூறுவது அறிஞர் அவையிற் செல்லாத தவறு பொருந்திய முடிபுகளாம். ஆறுமுகநாவலர் பழைய வைதிக சைவத்தைப் புனருத்

தாரணஞ்செய்யவந்த பெரியார். சமயகுரவர் சந்தானகுரவர் முதலிய அருட் செல்வர்கள் காட்டிய நெறியிலேயே நின்று நமது சற்சமயமாகிய வைதிக சைவத்தைப் பரிபாலனஞ் செய்தார். அதுவன்றிப் புதியதொரு நெறியை நிறுவினாரல்லர். அவர் பரிபாலித்தசைவம், அதிபரமாப்தராகிய பரமசிவன் அருளிச்செய்த வேதங்களையும் ஆகமங்களையும் முதநூலாகக்கொண்டு, தேவாரம் திருவாசகம் திருமந்திரம் சிவஞானபோதம் முதலிய நூல்களினாலே பேசப்பட்ட வைதிகசைவசித்தாந்த சமயமேயாம். ஆகையினாலே எந்தக்காலத்துக்கும் எல்லாருக்கும் பயன்படுமாறு நூல்களை வெளியிட்டருளினார் நாவலர்பெருமான் என்பது நிச்சயிக்கப்படும். அவருடையநூல்களை அனுபவிப்பது வீண்வேலையாயின் அவர் எழுதிய நூல்களுக்கு ஆதாரமாயிருந்த தேவாரம் திருவாசகம் திருமந்திரம் முதலிய நூல்களை அநுபவிப்பதும் வீண்வேலையென்றே அறிஞர்களாற் கருதப்படும்.

சைவப்புலவர் அவர்கள் பலமுறையில் வெகு சிரத்தையோடு நாவலர் பெயரை எடுத்தெடுத்து எழுதியிருப்பினும் அவருக்கு மாறுபட்டே சென்றுள்ளார் என்பது மிகுதுலக்கமாகத் தெரிகின்றது. எப்படியெனில், அவைகளுட் சிலவற்றை இங்கே எடுத்துக்காட்டுதும்.

ஸ்ரீ நாவலர்பெருமான் சதுர்வேதங்களையும் சிவபெருமான் தோற்றுவித்தருளினார் என்று கூறுகின்றார்கள். இருக்கு முதலிய ஆரியவேதங்களைக் கடவுள்இயற்றினார் என்பது கட்டுக்கதை என்பர் சைவப்புலவர். நாவலர் வேதாகமங்களை விசுவசித்தொழுகவேண்டும் என்று சொல்லுகின்றார்கள். ஆரியவேதாகமங்களை நம்பவேண்டா மென்பர் சைவப்புலவர். வேதங்களும் ஆகமங்களும் பிரதமசிருஷ்டி ஆரம்பத்தில் பரமசிவனிடமிருந்து தோன்றின என்று நாவலர்பெருமான் அறிவுறுத்த, ஆரியமறைகளும் ஆகமங்களும் பிற்காலத்தில்எழுதப்பட்டனஎன்பர் சைவப்புலவர். வேதாகமங்கள் சமஸ்கிருதத்திலுள்ளன என்று நாவலப் பெருந்தகையார் போதிக்க, அதற்கு மாறுபட்டு மறைகளும் ஆகமங்களும் தமிழிலிருந்து மறைந்துபோயின என்பர் சைவப்புலவர். யாவராயினும் தத்தம் சாதிநெறி கடவாது ஆலய வழிபாடு செய்யக்கடவர் என நாவலர் கூற, ஆலயங்களை யாவருக்குந் திறந்துவிடவேண்டும் என்பர் சைவப்புலவர். இன்னும்பிறவுமுள. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரைச் 'சைவத்தொண்டர்' என்று ஒப்புக்கொள்வது உண்மையேயாயின், அவர் காட்டிய வழியில் ஒழுகி, உய்திபெறுவாராக.

### சங்கரபண்டிதர்.

(எ) நாவலரும் பண்டிதரும் திருத்திவைத்த பரம்பரையே நம் நாட்டில் இன்றும் சைவத்தைப் புரந்து வருகிறது. நீர்வேலி சிவ- சங்கரபண்டிதர் சைவப்பிரகாசனத்தில் "அநாதிபகவானாகிய சிவனால் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும்பொருட்டுப் பிரதம மகாசிருட்டி ஆரம்பகாலத்திலே செய்யப்பட்ட ஆதிச் சுருதியானது, சாமானியவிசேட பேதத்தால் வேதம் ஆகமமென இரண்டு மகாவிபாகமாயிருக்கும். அவற்றுள் வேதமானது இருக்கு யசுர் சாமம் அதர்வம் என நான்கு விபாகமாம். ஆகமமானது காமிகம் யோகஜம்.......... வாதுளம் என இருபத்தெட்டு விபாகமாம். ... ...... அச்சுருதியால் நியமிக்கப்பட்ட பதார்த்த நியமமே சைவசமயமெனப்படும்" என்றதும் கண்டுகொள்க.

## சிவாகமத்தோற்றம்—உமாபதிசிவாசாரியர்.

(கஅ) இனிச் சிவாகமத்தோற்றம்பற்றியும் அவற்றைச் சிவபெருமான் பக்குவர்கட்கு அருளிச்செய்த முறைபற்றியும் சிவாகமம் கூறுவதைத் திருமுறைகளும்,

"அண்டர்தமக் காகமநூன் மொழியு மாதியை."

"அஞ்சன மேனி யரிவையோர் பாகத்தன்
அஞ்சோ டிருபத்து மூன்றுள வாகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே,"

என்பது முதலிய திருவருட்பாடல்களால் உபதேசிக்கின்றன.

சைவசமய வரம்புகாட்டி அநேகநூல் செய்தருளியவரும், முள்ளிச் செடிக்கும் பெற்றான் சாம்பானுக்கும் திருக்கண்ணோக்கருளி உலகினரறிய முத்திகொடுத்தவருமாகிய உமாபதி சிவாசாரியசுவாமிகள் பௌஷ்கராகமத்துக்குத் தாம் எழுதிய சம்ஸ்கிருத விருத்தியுரையில், சிவாகமப் பிரமாணம் பல இடங்களிற் காட்டியருளுகிறார். அவற்றை இங்குத்தருதல் நலம் தரும். அவர் அவதாரிகையில் எழுதுவதாவது:—

"பேரருள் நிறைந்த அறுகுணத்தையுடைய முதல்வனாய பரமசிவன் அனைத்துயிர்களையும் உய்யக்கொள்ளும் பொருட்டு, காமிகமுதல் வாதுளமிறுதியான அருணூல்களை நாதமுதலிய வடிவினவாக அருளிச்செய்தான். பின்னர் அம்முதல்வன் சதாசிவவடிவினனாகியும் நின்று, நாதமுதலிய வடிவினவாகி வந்த அவ்வாகமங்களையே எண்ணிறந்த செய்யுள்வடிவாகப் பகுத்துப் பிரணவர் முதலிய சிவன்கள் பதின்மருக்கும் அநாதிருத்திரர் முதலிய உருத்திரர் பதினெண்மருக்கும் காமிக முதலிய தொகுதிமுறையானே உபதேசித்தருளினான். இதனைத் தந்திராவதார படலத்தில் விரித்துக்காட்டுவாம். இனி, அவ்வவ் விடங்களினின்று முறையானே மகாமேருசிகரத்தை அடைந்த அவ்வாகமக் கடலினின்றும் சாரமாக எடுத்து மந்தவுணர்வுடையோர்க் கருளுதற்பொருட்டு, நான்கு பாதங்களையுடைய பௌஷ்கரமெனப் பெயரிய ஆகமத்தை அறிவுறுத்தருளிய ஸ்ரீகண்டமுதல்வன்பால் சரியை கிரியாயோக பாதங்களைக்கேட்ட சனற்குமாரர் முதலாயினோர்......ஞான பாதத்தைக் கேட்கும் காதலுடையவர்களாய் வினவுகின்றனர்" என்பதாம். இங்ஙனம் அவதாரிகையில் ஆகமவரலாறு கூறி அதன் மேலும், நமது சிவாசாரிய சுவாமிகள், "அதிகாரேவயம்தேவ" என்று தொடங்கும் சூத்திரங்கட்கு உரை கூறுமிடத்து பலநூற்பிரமாணங்கொண்டு, பலபிரகாரமாகச் சிவாகமப் பிரமாணத்தை நிலையிட்டருளுவதோடு வேதவாக்கியங்களையும் ஆண்டாண்டு எடுத்தாளுகின்றார். அதன்மேலும் பிரமாண படலத்திலும், "அதிகாரசிவனானவர் சிருட்டிக்குப்பின்........பஞ்சமந்திரதேகமுடைய சதாசிவனாய் நாதரூபமாக வந்தஞானத்தை நானாவித செய்யுள்ரூபமாக வகுத்து, முதலில் சிவபேதமான பத்தாகமங்களையும் பிரணவர் முதலிய பதின்மருக்கும் உருத்திரபேதமான பதினெட்டு ஆகமங்களையும் அநாதிஉருத்திரர் முதலிய பதினெண்மருக்கும் உபதேசித்தருளினர்" என்று கூறியருளுகின்றார். இங்ஙனம் உமாபதிசிவாசாரியர் காமிகம் முதல் வாதுளாந்தமான சிவாகமங்கள் வைதிகசைவப்பிரமாண நூல்களேயாம் என நிலைநிறுத்தியருளியமை கண்டுகொள்க.

இங்கே வடமொழி இருபத்தெட்டாகமங்களையும் சிவபெருமான் திருவாக்கென்றும், அருள் நூல்களென்றும், அவற்றைக்கேட்டோர் பதின்மரும் பதினெண்மரும் என்றும் அறிவுறுத்துகின்றார் உமாபதி சிவாசாரியசுவாமிகள்.

(௧௯) "பழைய தமிழ் ஆகமங்களில் இருந்தே பௌட்கரம் முதலிய ஆகமங்கள் மொழிபெயர்க்கப்பட்டன" என்று சைவப்புலவர் அவர்கள் கூறினரே! உமாபதிசிவாசாரிய சுவாமிகள் பௌஷ்கராகமத்துக்குச் செய்தருளிய பேருரையில் நூல் வரலாறு கூறுமிடத்தேனும் வேறிடத்தேனும் ஆகமங்கள் தமிழில் இருந்தன என்று அருளியிருக்கின்றாரா? பழைய தமிழ் ஆகமங்களிலிருந்தே பௌஷ்கரமுதலிய ஆகமங்கள் மொழிபெயர்க்கப்பட்டன என்று கூறியிருக்கிறாரா? அன்றி வேறுபிரகாரம் அருளியுள்ளாரா? சந்தானசாரியர் காலத்துக்குப் பின்னே தமிழிலிருந்து வடமொழியிற் சிவஞானபோதம் மொழிபெயர்க்கப்பட்டதென்று திரு கா.சு. கூறியது பொய்யா? மெய்யா? மெய்தான் எனின்; உமாபதி சிவாசாரியருடைய பௌஷ்கராகம பாஷ்யத்தில் எத்தனையோ இடங்களில் வடமொழிச்சிவஞானபோத சூத்திரங்கள் எடுத்தாளப்பெற்றிருப்பதற்குக்காரணம் என்னை? குருக்கள்மாரால் ஆகமங்கள் எழுதப்பட்டிருப்பின், அவ்வாகமங்களைச் சிவபெருமான் அருளியதென உமாபதிசிவாசாரியர் புரட்டிச் சொல்லுவாரா? தேவாரம் பாடிய மூவரும் ஏனை அறிஞரும் காமிகம் காரணம் எனப்பிற்காலத்தில் வடமொழியில் எழுதப்பட்ட ஆகமங்களை ஒருபோதுங் கருதமாட்டார் என்றரே! உமாபதிதேவநாயனர் அவற்றைப் பிரமாணமாகக் கொண்டு, சிவன் திருவாக்கென்று ஸ்தாபனம் செய்ய வில்லையா? மேலும் போலிக்கட்டுப்பாடு அவைகளில் உண்டென்று எங்கேனும் சொல்லியதுண்டா? உமாபதி சிவாசாரிய சுவாமிகள், சிவபெருமான் போகமோக்ஷ புருஷார்த்த சித்தியின் பொருட்டு விமலஞானத்தை அருளிச்செய்தார் என்று கூறியிருப்பது பொய்யா? மெய்யா? சீகாழிப்பிள்ளையாரும் சகலாகம பண்டிதரும், திருமூலதேவநாயனரும் பிறரும் (சங்கத) சமஸ்கிருத பாஷையிலேயே வேதாகமங்கள் உள்ளன என்று அருளுபதேசம் செய்திருப்பது பொய்யா? மெய்யா? இவற்றிற்குவிடையை அறிஞர்உலகம் வரவேற்கின்றது.

## மறை, வேதம், அந்தணர், பார்ப்பார், வேள்வி.

(௨௦) இனித் தேவாரத்திருமுறையிலே வேதம் மறை நான்மறை வேள்வி அந்தணர் பார்ப்பார் என்னும் மொழிகளை எவ்வகைப்பொருளினல் நமது சமயாசாரியமூர்த்திகள் பிரயோகித்திருக்கிறார்கள் என்பதை அவர்கள் அருள் வாக்குக்கொண்டே காட்டுவாம்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் தேவாரத்திற் பல இடங்களிலும் 'முத்தமிழ் வல்லவன்' நான்மறை வல்லவன்' என்பன ஆதியாகத் தமிழையும் சம்ஸ்கிருத வேதத்தையும் சிறப்பித்து வேறு பிரித்துக்கூறியிருத்தலானும் சுந்தரமூர்த்திநாயனரும் "நாளு—ஞாலந்தான் பரவப்படுகின்ற நான்மறை அங்கமோதிய நாவன்" எனத்தம்மைக் கூறியிருத்தலினலும், அதுவுமன்றி,

1. அந்தணர் வேள்வியு மருமறைத் துழனியுஞ்
செந்தமிழ்க் கீதமுஞ் சீரினல் வளர்தர...மழபாடி (சம்பந்)

2. செந்தமிழர் தெய்வ மறைநாவர் செழுங்கலை தெரிந்த வவரோ
டந்தமில் குணத்தவர்க ளர்ச்சனை செய்ய வமர்கின்ற வரனூர்...
மிழலை—(சம்பந்தர்)

எனக் கூறியிருத்தலாலும், அந்தணருடைய வேள்விகளையும் அவரோதும் வேதஒலியையும், தமிழையும் வேறு பிரித்துக் காட்டியிருப்பதுகொண்டு, அந்தணரோதிய மறை செந்தமிழல்லாத வேறுபாஷையென்றும் தொனிக்கின்றவாறு காண்க.

அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே,

என்று அப்பர்சுவாமிகள் அருளிய தேவாரப்பகுதியில், 'அந்தணர்க் கருங்கலம்' என்றும், 'நங்களுக் கருங்கலம்' என்றும், இருவகையாகப் பிரித்து அருளியிருப்பதை நோக்கும்போது, அருமறை மூன்று வருணத்தாருக்கும் உரியது என்றும் ஆகமம் நான்குவருணத்தாருக்கும் உரியது என்றும்பெறப்படுகின்றன.

மேலும் 'பார்கிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய' என வரும் திருவெண்பாக்கத்துச் சுந்தரமூர்த்திகள் தேவாரத்தில், மறையோர் என்றது முதல் வருணத்தினையும், பத்தர் என்றது மற்றையோரையும் குறித்து நிற்பது கண்டுகொள்க.

நம் சமயகுரவர்கள் தாம் சென்று தரிசித்த ஸ்தலங்களிலே அந்தக் காலம் நிகழ்ந்த சிறப்புக்களை நேரேகண்டு, மேல்வருமாறு அருளிச் செய்திருக்கிறார்கள்.

1. அங்கமும் வேதமு மோதுநாவர் அந்தணர்நாளும் அடிபரவு
மங்குல் மதிதவழு மாடவீதி மருகல்.

2. வேதியர்கள் வேள்வி யொழியாது மறைநாளு மோதி
ஆரநாம முரைத்திடு நள்ளாறே.

3. இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்து மிளங்கோயில்

4. ஒன்றியசீ ரிருபிறப் பாளர் முத்தீயோம்பு முயர்புகழ்
நான்மறை யோமாம் புலியூர்.

5. புந்தியினன் மறைவழியே புற்பரப்பி நெய்சமிதை கையிற்கொண்டு
வெந்தழலின் வேட்டுலகின் மிகஅளிப் போர்சேரு மிழலையாமே.

6. பொய்யாத வாய்மையாற் பொடிபூசிப் போற்றிசைத்துப் பூசை செய்து, கையினு லெரியோம்பி மறைவளர்க்கு மந்தணர்தங் கருப்பறிய லூர்.

இங்கே பிராமணர்களை அந்தணர் வேதியர் மறையோர் இருபிறப்பாளர் எனக் குறிப்பிட்டருளியதும், வேதமோதுதல் வேள்விசெய்தல் முத்தீயோம்புதல் ஆகிய தொழில்களை அவர்கட்கு உரியனவாகக் கூறியருளியதும் கண்டுகொள்க. வேளாளர்களுக்கு வேதமோதுதலை உரியதாகக் கூறாது, ஈதலிற் பெருங்கீர்த்தி உடையவர்களெனக் கூறினர்கள். அதனை,

1. வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும் தாளாளர்
எனவும்,

2. கொடையுடை வண்கையாளர் மறையோர்கள் என்றும்
வளர்கின்ற கொச்சை வயமே எனவும்

3. கொடையிலோ வார்குலமும் உயர்ந்த மறையோர்
கடாம்புடைகொள் வேள்விப்புகை யும்பருலாவும் புகலியே.

எனவும் கூறியருளியவாற்ருன் அறிக.

(உக) திருமால் துதியாக விஷ்ணுபக்தர்கள் அருளிய நாலாயிரப்பிரபந்தம் உள்ளது. இதனுள்ளும் மறை நான்மறை அந்தணர் மறையோர் என்பதாதிய சொற்களை விஷ்ணுபக்தர்கள் பிரயோகித்திருக்கிருர்கள்.

### பெரியாழ்வார்.

1. மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை அளித்திருப்பார்
சிறப்புடைய மறையவர்கள்வாழ் திருவரங்கம்.
2. தென்னுடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கம்.

### மதுரகவி ஆழ்வார்.

3. அவ்வரு மறையின் பொருள் அருள்கொண்டு ஆயிரம் இன்றமிழ்
பாடினன்.

### திருமங்கை ஆழ்வார்.

4. செந்தமிழும் வடகலையும் திகழ்ந்தநாவர் திசைமுகனே அனையவர்
கள் செம்மைமிக்க—அந்தணர்த மாகுதியின் புகையார் செல்
வத் தனியழுந்தூர்

என வருவன காண்க. இவைபோன்றன பலவுள. இங்கேயும் வடமொழி தென்மொழிகளைப் பாகுபடுத்திக் கூறியிருப்பதையும் வேதியர்க்குச் செந்தீ வளர்த்தல் மறையோதுதல் என்னுந் தொழில்களை உரியனவாகக் கூறியிருப்பதும் கண்டுகொள்க.

மாணிக்கவாசக சுவாமிகள் அந்தணர் வடிவுகொண்டு வந்த ஆசாரிய மூர்த்திகளைக் குறித்து,

1. மறைபயி லந்தணு யாண்டுகொண்ட திருவான தேவன்.
2. மறையான் பெருந்துறையான் கொண்ட புரிநூலான்.
3. முன்னே யெனையாண்ட பார்ப்பானே.

என்பனவாதிய அருண்மொழிகளாற்றுதித்தார். இங்கேசிவபெருமான் அந்தணர்கோலங் கொண்டதற்கியைய முப்புரிநூல் தரித்து வந்தனர் என மாணிக்கவாசக சுவாமிகள் அருளியிருப்பதும் கண்டுகொள்க.

இந்தவிவரணத்தால் தேவாராதிகளிற்கூறியபடி அந்தணர் மறையோர் பார்ப்பார் என்பன முதற்குலத்தவரையே சுட்டும்என்பதும், அதற்கு மாறுபட்டு, "பார்ப்பான் என்றது நூல்களைப் படிக்கிறவன் என்ற கருத்தைத் தருமேயன்றிப் பிராமணன் என்ற கருத்தைத் தராது" என, சைவப்புலவர் வரைந்ததுபொருந்தாது என்பதும், "அந்தணர் என்பது நல்லருளுடையோரைக்குறிக்குமேயன்றிப் பிராமணசாதியைக் குறியாது" என ஒருவர்எழுதியதும்பொருந்தாதென்பதும், அந்தணன்என்றமொழி பிராமணசாதியைச்சுட்டும் என்பதும், சமயகுரவர்கள் வேதம், மறை, நான்மறை என்றெடுத்தோதியது இருக்கு முதலிய வடமொழி நான்மறைகளையே யென்பதும், நெய், சமித்து, தருப்பைமுதலிய உபகரணங்கொண்டு செய்யப்பட்ட வே

ள்வி அவ்வாரிய வேதத்தின்கண்ணேயே உள்ளது என்பதும், வேதமோதுதலும், வேட்டலுமாகிய சிறப்புகள் தமிழ்நாட்டிற் பண்டுதொட்டே நிகழ்ந்துவந்தன என்பதும், நம் சமயாசாரியர்கள் அவற்றைப் பாராட்டியுள்ளார்கள் என்பதும், ஆதலின் அவற்றை இகழ்ச்சிசெய்தல் பெருங்குற்றத்தின்பாலதாம் என்பதும் அறிந்துகொள்ளத் தக்கனவாம்.

இதன்மேலும்,

(உஉ) உமாபதிசிவாசாரிய சுவாமிகள் தாம்அருளிச்செய்த சேக்கிழார் புராணத்திலே, "வேதியர் வேத முழக்கொலி வேதத்தைத் தமிழால்— ஓதியமூவர் திருப்பதி கத்தொலி" எனவும், "தேவரு மெழுதவொண்ணு மறையைத் தமிழ்செய்து திருப்பதிகம் பாடுமூவரும்" எனவும் அருளிச்செய்தார்.

இங்கே 'வேதியர் வேதமுழக்கொலி' என்றது, மறையோர் அத்தியயனம்செய்யும் சங்கதத்தில் உள்ள (சம்ஸ்கிருத) வேதமுழக்கத்தையே குறிப்பிட்டதாமென அறிக. ஆரியமறையைத்தவிர, வேறு எப்பாஷையில் எந்த நூல்களையேனும் முழக்கமாக ஒலிக்கிறார்களா?

"வெதிரேய் காத்துமென் றேலேய் சுவல்வெள்ளை நூலிற்கொண்மூ
வதிரேய் மறையினிவ் வாறுசெல்வீர்"

என வேதியரை வினவல் என்னுந் துறைச் செய்யுளில், திருவாதவூரடிகளும் இவ்வாறேயருளினர். அந்தணர்க்குரிய தண்டம் ஆசனம் பூணூல் ஆதிய அடையாளங்களைச் சொல்லி அவர்கள் அத்தியயனம் பண்ணும் வேதவொலி மேகமுழக்கம்போலும் என்றருளப்பட்டிருக்கிறது. ஆதலின் வேதமுழக்கொலி என்று உமாபதிசிவாசாரியர் திருவாய்மலர்ந்தருளியது ஆரிய வேத முழக்கொலியையேகுறிப்பதுநிச்சயம். "மீது முழங்கு முகிலொதுங்க வேத வொலிகண் மூழங்குவன" என்பது அருண்மொழித்தேவர் வாக்கு.

"தேவரு மெழுதவொண்ணு மறை" என்றதும், 'எழுதாக்கிளவி' எனப்படும் வேதத்தையேயாம். எழுதாக்கிளவி என்பது ஆரியமறையையே உணர்த்துமென்பது,

"எழுதாக்கிளவிநின் மொழியெனப் படுதலின்"

எனவரும் குமரகுருபர சுவாமிகள் வாக்காற் பெறப்படுதலின், உமாபதிதேவனர் 'எழுதவொண்ணுமறை' என்றதும், வடமொழிவேதத்தையே சுட்டியதென்பதற்கு அணுத்துணையேனும் சந்தேகமில்லை. மேலும், 'வேதத்தைத் தமிழாலோதிய மூவர் திருப்பதிகத்தொலி' என்றமையினாலும், 'எழுதவொண்ணுமறையைத் தமிழ்செய்து திருப்பதிகம்பாடு மூவரும்' என்றமையானும் சமயாசாரிய சுவாமிகள் தமிழில் வெளிப்படுத்துவதற்கு முன்னரே, வேதமெனப்படும் மறைகள் தமிழிலன்றி வேறு மொழியிலேயே இருந்தன என்பது பெறப்படும். அம்மொழி எது எனஆராயுமிடத்து, "ஆரியம் வேதமுடைத்து" எனவும், "ஆரியமாய் அறம்பொரு ளின்பம்வீ டெல்லா மறைந்துயிர்கட் கறிவுசெய லளிப்பதுநூல்" எனவும் "ஆகமத்தொடு மந்திரங்களமைந்த சங்கதம்" எனவும்வரும் வாக்குக்களினல் அது ஆரியபாஷையென்பதே சித்தமாயிற்று.

"எழுதவொண்ணுமறையைத் தமிழ்செய்து" என்பதனல், எழுதாமறையாகிய வேதப்பொருளே எழுதுந்தமிழ்மறையாகிய தேவாரம்என்பதாயிற்று.

"மாமறை நான்கினோ டங்க மாறும் வல்லவன் வாய்மையினு
ளுமரு கேள்வி நலந்திகழும் ஞானசம் பந்தன்சொன்ன
பாமருபா டல்கள்பத்தும்"

என்பதாதி அருட்பாக்களினுல், நான்மறைகளையும் அங்கங்களையும் பயின்றவராகிய ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையார் எழுதும்மறையாகிய தமிழ்ப் பதிகம் பாடியதாகக் கூறியிருப்பதை அறிக. இவ்வாறே "வேதம் தமிழ்செய்த மாறன்" என விஷ்ணுபக்தரும் கூறியிருக்கிறார். ஆதலால் நமது தமிழ் மறை ஆரியவேதத்தின் சாரமேயாம். ஆகவே ஆறுமுகநாவலர் "வேதத்தின் ஞானகாண்டப் பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடாவண்ணம் உள்ளபடி அறிவிக்கும் தமிழ்நூல்கள் தேவாரம் திருவாசகம் என்னும் இரண்டுமாம்" எனக்கூறியது, 'வேதத்தைத் தமிழாலோதிய மூவர் திருப்பதிகத்தொலி' எனவும், 'மறையைத் தமிழ்செய்து திருப்பதிகம்பாடு மூவரும்' எனவும், உமாபதிசிவாசாரியர் அருளிய வாக்குக்களினுல் ஒப்புக்கொள்ளக் கூடியதேயாம். இதுபற்றியே சபாபதிநாவலரும், "இனித் தமிழ்வேதங்கள் வேதாகம முதனூலிரண்டினையும் மூலமாகக்கொண்டு, அவற்றின் சாரமாய் அவதரித்தன" என்றும், "ஏனைத்திருமுறைகளும் நிகமாகம சாரமாதல் ஆய்ந்துணர்க" என்றும் திராவிடப்பிரகாசிகையிற்கூறினர் என்றுணர்க.

நிகமம்—வேதம்.

(உரு) நல்வழிகூறவந்த ஔவையார்,

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

என அருளுகின்றமையினுலும் நான்குவேத உபநிடதங்களும், தேவாரம் திருவாசகம் திருமந்திரம் ஆதிய அருணூல்களும் ஒரேபொருளைக்குறித்தன என்பதை உணர்ந்துகொள்க. திருக்குறள்முதலிய நூல்களெல்லாம் வேறு வேறு வாக்கியங்களாகத் தோன்றினும் பதிலக்கணமும் பசுலக்கணமும் பந்தலக்கணமும் முத்திலக்கணமுமாகிய இவைகளை ஒருதன்மையாகவே அறிவிக்கும் நூல்களாம். இதன்விளக்கவுரை செந்திநாத ஐயரவர்கள் அச்சிட்ட நீலகண்டபாடிய மொழிபெயர்ப்பு உபக்கிரமணிகை உருச முதலாகவுள்ள பகுதிகளால் அறிந்துகொள்ளலாகும். இவ்விதமாகிய வேதங்கட்கும், தேவாரம்முதலிய திராவிட வேதங்கட்கும் தொடர்பு இருக்கின்றமையினுற்றான் உமாபதிசிவாசாரியர் முதலிய மேலோர் தொடர்புபடுத்திக் கூறினர்கள். என்ன தொடர்புண்டு என்று கேட்ட சைவப்புலவர் அத் திருநெறிச் செல்வர்களுடைய அருள்வாக்குக்களை உற்றுணர்ந்து உண்மை கடைப்பிடிப்பாராக.

(உச) மெய்யுணர்ச்சி விளக்கமின்றி வெறும் போலிக் கட்டுப்பாடுகளைப் புணர்த்திப் பிற்காலத்தில் எழுதப்பட்ட வடமொழி ஆகமங்களைச் செந்தமிழ்த் தென்னுடு ஏற்காது" என்றார் சைவப்புலவர். இவருக்கு வழிகாட்டியாயிருந்த ஸ்ரீ. கா. சுப்பிரமணியம்பிள்ளையும் "தமிழ் அருள்நூல்களைத் தழுவியெழுதப்பட்ட ஆகமங்களைப் பிரமாணமாகச் சைவர் கருதுவாராயினர். அதனுல் வந்த மயக்கிற்கு அளவில்லை." என்றார். சைவப்புலவர் தாம் எழுதியதற்கு மாறுபட்டு, "ஆகமங்கள் பொய்யெனஅழிவழக்குப்பேசு

கிறேனென என்னைவைதீர்கள். நான் அழிவழக்குப்பேசவில்லை. தமிழ் ஆகமங்கள்தான் தமிழ்நாட்டில் நிலவவேண்டும். என்கிறேன்'' என்றாரே. முன் அழிந்துபோன ஆகமம் நிகழ்காலத்தில் நிலவுவதெங்ஙனம்? இனி, சுப்பிரமணியபிள்ளையும் தாம் முன் வரைந்தமைக்கு விரோதமாக, அருணந்திசிவாசாரியரைப்பற்றிச் சொல்லுமிடத்து, ''சைவர்களும் ஆதிசைவரும் இனியேனும் ஆகமங்களைப் பாதுகாக்க முயலவேண்டும். வடநூல்களை அச்சிடுவோர் மொழிபெயர்ப்பில்லாமல் வெளிப்படுத்துதல் தமிழ்மக்களுக்குப் பெரும் பயன் விளைக்காது. சிவாகமசங்கங்கள் ஆகமநூல்களைச் செவ்வையான மொழிபெயர்ப்போடு அச்சில் வெளிப்படுத்த முயலுமானால் அது தமிழ் மக்களுக்குப் பேருதவியாயிருக்கும்'' என்றார். இவ்விருவரும் தாங்கள் முன் எழுதியதற்கு மாறாகப் பின் எழுதுவதோடு, ஒருவரோடொருவரும் மாறுபடுகின்றனர். எங்ஙனமெனில், ''வடமொழி ஆகமங்களைத் தென்னாடு ஏற்காது'' என்கிறார் சைவப்புலவர். 'வடமொழி ஆகமங்களையும் நல்ல மொழிபெயர்ப்போடுஅச்சிட்டால் தமிழ்மக்களுக்குப் பேருதவியாயிருக்கும்'' என்றார் கா. சு. பிள்ளை. இவ்விருவரும்இப்படி முரண்படக்கூறியமையே இவர்களுடைய கொள்கைகள் ஆதாரமற்றன என்பதை நிலைநிறுத்தும்.

(உரு) தமிழில் ஆகமம் உண்டென்பதற்குப் பிரமாணமாகச் சைவப் புலவர்,

மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமந் தோற்றுவித் தருளியும் என்றும்

மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றவைம் முகங்களாற் பணித்த ருளியும் என்றும்

வரும் திருவாசகப் பகுதிகளைப் பிரமாணமாகக் காட்டி, ''இப்பகுதிகளால் மகேந்திரமலையில் ஐம்முகங்கொண்டெழுந்தருளி இறைவன் ஆகமங்களை அருளினார் என்ற செய்தியை அறிகிறோம். மகேந்திரமலை உள்ள இடம் தமிழ்நாடாதலால் ஆகமங்களைக் கேட்டவர்கள் தமிழர்கள் ஆதல் தெளிவு'' எனத் தம் கோளை நிலைநிறுத்தி முடித்தனர்.

இத் திருவாசகப் பகுதிகளில் தமிழ்நாட்டில் மகேந்திரமலையுளதெனச் சொல்லப்படவில்லை. சைவப்புலவரும் அதற்கு ஆதாரமொன்றும் காட்டவில்லை. அவருக்கு அது இயல்பே. கா. சு. பிள்ளை தமிழ்நாட்டில் மகேந்திரமிருந்ததற்கு வடமொழி உபாகமமாகிய சிவதருமோத்தரத்தைப் பிரமாணமென்றுகாட்டினார். கா. சு. பிள்ளை கற்பனையாக எழுதிவைத்ததைக் கைப்பற்றிக்கொண்டே சைவப்புலவரும் மேற்கண்டவாறு வெளியிட்டாரெனக் கருத இடமுண்டு. வடமொழி ஆகமங்களைத் தள்ளுவோருக்கு மகேந்திரமலைவிஷயத்தில் அது பிரமாணமாக வந்ததெப்படி? தென்னாட்டுச் சிவத் தமிழ்மக்கள் எவ்வளவுசிறந்த நூல்களையும் இறைவன் அருளினானெனக் கூறமாட்டார்கள் என்றற்றொடக்கத்தனவாக வற்புறுத்திநிற்பவர், ''இறைவன் ஐம்முகங்கொண்டு ஆகமங்களை அருளினான்'' என்று பூர்வாபரவிரோதமாகக் கழறினாரே! இப்படியிவர் முன்னொடு பின் முரணக்கூறிய இடம் இன்னுமுண்டு.

மகேந்திரம் என்பதே வடமொழி. தமிழாகமம் வந்த மலையின் பெயர் தானும் வடமொழி; ஆகமமும் வடமொழி. வேதமும் வடமொழி.

இனி, சுவாமி வேதாசலம் எழுதிய திருவாசக விரிவுரையிற் சொல்லி யபடி "தெலுங்குநாடாகிய கஞ்சம் ஜில்லாவில் பண்டைய சிவாலயங்களு டன்விளங்கும் மகேந்திரம் எனப் பெயரியமலை இருப்பதாகத் தெரிகிறது. சிறப்புப்பெயரகராதியிற் காட்டியபடி வடநாட்டில் உற்கலநாடு முதல் காண் டவ நாடுவரையில் வியாபித்துள்ளது மற்றொரு மகேந்திரமலை." இவ்வாறு பற்பல மலைகள் வேறுபாஷைகள் வழங்கும் நாடுகளிலும் விளங்குதலினு லே தென் தமிழ்நாட்டு மகேந்திரமலையிற்றான் இறைவன் ஆகமங்களை அரு ளினன் என்பதற்கு இவர் உரைதவிர வேறு ஆதாரமில்லை. மகேந்திரம் என்னும் பெயருடைய மலையொன்று உள்ளதெனச் சிவதருமோத்தரத்தும் கந்தபுராணத்தும் கூறப்பட்டிருப்பினும் அது ஒரு சிவஸ்தலமென்றேனும் அங்கே சிவபெருமானுக்குத் திருக்கோயில் உண்டென்றேனும் சொல்லப்ப டவில்லை. எழுமலைகளுள் ஒன்றெனமாத்திரம் சொல்லப்பட்டுள்ளது. திரு வாசகத்துட் கூறப்பட்ட மகேந்திரமலை மேற்சொல்லிய மலைகள் அல்ல; திருக்கைலாசபருவதமேயாம். பெரியபுராணஉரை ஆசிரியர் கோவை C. K. சுப்பிரமணியமுதலியார் திருத்தொண்டர்புராணம் 2244-ம் செய்யு ளிற் கூறுவதாவது:- மயேந்திரம் இமயத்தின் சிகரம் என்பாரும் தென்கட லில் இருந்து நீரினால் மூழ்கியமலை என்பாரும், இரண்டிடங்களிலும் ஆக மங்களை வெளிப்படுத்தியருளினர் என்பாரும்ஆகப் பலதிறத்தார் ஆராய்ச்சி யாளர். மகேந்திரம் கையிலையின் சார்பிலே உள்ளதொருமலை என்பது திரு விசைப்பாவினாலே புலமாகின்றது......" என்பதாம். மேலும், திருத்தொண் டர் புராணத்தில் (திருநாவுக்கரசுநாயனார் புராணம்) அடைவு திருத்தாண்ட கத்துக்குப் பொருள்கூறுமிடத்திலும் மகேந்திரமாமலை-கைலாயம் என்ப என்றுரைத்து 'மன்னுமாலை,' 'மற்றவைதம்மை' என்றதிருவாசகப் பகுதி களையும் எடுத்துக் காட்டினர்.

சிவபெருமான் வேட்டுவகோலங்கொண்டு அருச்சுனனுடன் பொருத இடம் கைலைமலைச்சாரலென்று பாரதத்தாற் பெறப்படுகின்றது. இப்பொரு ளைத் திருமாளிகைத்தேவர் "உறவாகிய யோகமும்" என்னும் திருவிசைப் பாப்பதிகத்தில்,

> "வண்டார் குழலுமை நங்கை முன்னே
> மகேந்திரச் சாரல் வராகத் தின்பின்
> கண்டார் கவலவில் லாடி வேடர்
> கடிநா யுடன்கை வளைந்தா யென்னும்."

என்ற திருப்பாட்டில் வைத்து, விளங்கப் பாடியருளினர். அதனால், அப்ப திகம் முழுவதிலும் மகேந்திரம் என்பது வெள்ளியங்கிரியையென்று தெளி வாக விளக்கி அருளினர். பதினோராந்திருப்பாட்டில் சோதிமகேந்திரம் என்று விசேடித்து விளக்கினர். சோதி-வெண்மை ஒளி; எனவே சோதி மகேந்திரம் வெண்மையாகிய கைலாசம் என்றவாறும். மகேந்திரம் என் பது மிக மேலாகிய பெருமைஉடையது என்று பொருள்படும். அப்பெருமை எவை எனில், ஊழிக்காலத்திலேயும் பிரளயவெள்ளத்தில் அழுந்தாது, அதன்மேல் வளர்ந்தோங்குதலும், அழியாதிருத்தலும், பதமுத்தித்தானமா யிருத்தலும் பக்குவராயகணங்கட்குத் தக்க இன்பங்கொடுத்துப் பரமசிவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் தன்னிடங்கொண்டிருத்தலும் முதலி யன கைலாசகிரிக்குப் பெருமையாம். திருவாதவூரடிகளும் இக்கருத்துப்

பற்றியே 'சோதி மகேந்திரநாதன்' என்று அருளிச்செய்தார். ஈண்டு சோதி என்ற அடைதானே மகேந்திரமலை கைலை என்பதை நன்குவிளக்கும். இன்னும் திருவாதவூரடிகள்

"வேடுரு வாகி மகேந்திரத்து மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட இருந்த சிவபெருமான் சிந்தனைசெய் தடியேங்க ளுய்ய
ஆட லமர்ந்த பரிமாவேறி யையன் பெருந்துறை யாதி யந்நாள்
ஏடர்களை யெங்கு மாண்டுகொண்ட வியல்பறிவா ரெம்பிரா னாரே"

என்னும் திருவாசகத்தானும் மகேந்திரம் கைலாசமேயென்பதை விளக்கிய வாறு காண்க. எப்படியெனில் தேவர் குறைநேரின் கைலைக்குவந்து சிவ பெருமானைத் தரிசித்துத் தம் குறைகூறி அநுக்கிரகம்பெறுதல் இயல்பு. அருச்சுனன்பொருட்டு வேட்டுருக்கொண்டு, கைலையில் இருந்தஞான்று, குறையுள்ள தேவர்கள் வந்து, காளகண்டம் சதுர்ப்புயங்களோடு ஸ்ரீகண்ட சரீரியாய் என்றும்போல், இறைவரிருக்கக்காணமையின், எம்பெருமான் எங்கே போயினரோ என்றெண்ணுன்னித் தேடும்படியிருந்தமையினால் என்க. ஏடர்-அன்பர்.

ஒருகாலத்துத் தேவர்கள் சிவபெருமானை நோக்கித்துதிக்க அதற்கு மகிழ்ந்து அவர் பிரசன்னராக அவர்கள் அவ்வாண்டவனைப் பூசனைபுரிதல் வேண்டுமென்ன, பெருமான் சூரிய மண்டலத்தூடு விளங்கும் நான்முகத் தோடு தோன்ற அத்தேவர் விதிப்படி பூசனைபுரிந்தனர். அதுசெய்யத் திரு வுளமகிழ்ந்து ஆகமம் இருபத்தெட்டனையும் கொடுத்து மறைந்தனர். கொடு த்த ஆகமம் பன்னெடுங்காலம் கழிய இறந்துபோதலும் உமாதேவியார் அவற்றைத் தோற்றுவிக்க வேண்டுமென்று இறைவற்கு விண்ணப்பஞ் செய்ய, அவர் ஆகமம் முழுவதையும் முன்புபோல விரித்தருளினர் என வாயுசங்கிதை கூறும். ஆதலின்,

மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்

என்னும் பகுதிக்கு (ஒடுங்கிய ஆகமங்களையெல்லாம் நடை பெறச் செய்யவேண்டுமென்று இறைவி) விண்ணப்பஞ் செய்யப் பெற்ற ஆகமங்கள் எல்லாவற்றையும், ஊழிக்காலத்தும் அழியாது நிலைபெறும் கைலாசமலையாகிய மகேந்திரமலையில் வெளிப்படுத்தி அருளியும் என்பது பொருளாம். இன்னும் கீர்த்தித் திருவகவலில்,

(1) 'தில்லைமூதூராடிய திருவடி' என்று ஆரம்பித்து அடுத்ததலம் (2) மகேந்திரமாகக் கூறினர். முடிக்கும்பொழுதும் அம்முறையே(1)'போ லிதருபுலியூர் புக்கினி தருளினன்' எனவும், (2) 'ஒலிதருகைலை யுயர் கிழவோனே' எனவும்கூறி, தில்லைக்கும் புலியூர்க்கும், மகேந்திரத்துக்கும் கைலைக்கும் சம்பந்தம் காட்டி இரண்டும் ஒன்றேன விளங்கவைத்தவா றும் கண்டுகொள்க. இன்னும் இவ் அகவலுள் 'மந்திரமாமலை மகேந்திர வெற்பன்' எனவும், போற்றித் திருவகவலுள் 'மந்திரமாமலை மேயாய் போற்றி' எனவும் அருளி, மகேந்திரம் கைலாசமென் விளக்கினர். கை லாசமலையில் நவரத்தினகசிதமான செம்பொற் றிருக்கோயில் ஒன்று தேவருமருளுமாறு பேரழகோடுள்ளது. அக்கோவில் பொருந்திய கை

லாசம்எனப் பொருள்படுதலால் என்பதாம். மந்திரம்-செம்பொற்றிருக் கோயில்.

இனி, "மன்னுமாமலை......"என்பதற்கு, சிவபெருமான் சதாசிவ தத்துவ புவனத்தில் இருந்து, சத்தி சதாசிவன் முதலாயினர்க்குச் சொல்லியருளிய ஆகமங்களைத் திருநந்திதேவர் சனகாதிமுனிவர்பொருட்டு மகேந்திரமாகிய கைலையில்வெளிப்படுத்தினர் என்பதுமொருபொருள். அது,

சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேச ருருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றம் பெற்ற
நவவா கமமெங்க ணந்திபெற் றனே. என்பதனால் உணர்க.

'கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றவைம் முகங்களாற் பணித்த தருளியும்

என்பது திருவிளையாடற் புராணத்திலுள்ள வலைவீசுபடலத்தின் ஒரு பகுதியைச் சுட்டுகின்றது. குமரவேள் கடலில் எறிந்த சிவாகமங்களை, சிவபெருமானுடைய ஆஞ்ஞையினால் திருநந்திதேவர் மகரவடிவாகித் தமது தலையிலே தாங்கிக்கொண்டு, சமுத்திரத்திற் படிந்திருந்த காலத்தில், வலைஞர்கோன் வேடம் பூண்டுவந்த சிவபெருமான் அம்மீனைப்படுத்து, அவ்வாகமங்களை வாங்கி மகேந்திரத்தில் வீற்றிருந்து, அருளிச்செய்தார் என்பது சரிதம்,

கேவேடர் ஆகி—வலைவாணராகி, மாவேட்டு ஆகிய—மகாலக்குமி எனக்கூறி வேதம் போற்றும் உமையாகிய இறைவியைத் தாம் மணத்தல் நிகழும்படி, கெளிறது படுத்து-சுறவேற்றை அகப்படுத்து, ஆகமம் வாங்கியும் — அது சிரத்திற் கொண்டிருந்த ஆகமங்களைத்தாம் எடுத்தும், மற்றவை தம்மை—அவ்வாகமங்களை, மகேந்திரத்து இருந்து—கைலையில் எழுந்தருளியிருந்து, உற்ற ஐம்முகங்களாற் பணித்தருளியும்—அவ்வாகமங்கள் முன்னரே இருந்து வெளிப்பட்ட ஐந்து திருமுகங்களாலும் இறைவிக்கு உபதேசித்தருளியும் என்பது பொருள். சுறவிடத்து வாங்கிய ஆகமங்களைத் திருவுத்தரகோசமங்கையில் உபதேசித்தார் என்னும் புராணவசனத்தோடு திருக்கைலாசமலையில் உபதேசித்தார் என்பது மாறுபடுமோ எனில், உத்தரகோசமங்கையில் ஒருமுகத்தோடிருந்து உபதேசித்த ஆகமங்களையே ஐம்முகத்தோடிருந்து தோற்றமுறைப்படி உபதேசித்தருளவேண்டும் என்று அம்மை இரப்ப இறைவன் அங்ஙனம் உபதேசித்தருளினன் ஆதலால் மாறுபடாதென்க. "மகேந்திரப் பொன்மலையில் மலைமகளுக்கருளும்குருநீ"என்னும் சொற்றொடரைத் திருமாளிகைத்தேவர் திருவிசைப்பாவிற் காணலாம். இதன்பொருளையும்,

வெள்ளி மால்வரைக் கைலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியா ரருள்செயத் தொழுது
தெள்ளு வாய்மையி னாகமத் திறனெலாந் தெரிய
உள்ள வாறுகேட் டருளினு லுலகையா ளுடையாள்.

என்ற பெரியபுராணச்செய்யுளையும் ஒப்புநோக்குங்கால் மகேந்திரம் என்னும் பெயர் கைலையங்கிரிக்குப் போந்தபெயராகும் என்பது தெளிவு. இன்னும் சிவபெருமான் வேதாகமங்களைச் சனகாதியருக்கும் பிறருக்கும் உபதேசிக்கும் முக்கியஸ்தானமாகக்கொண்டு விரும்பி எழுந்தருளியிருக்கும் ஸ்தலம் திருக்கைலாசமலையேயாகும் என்பது சிவதருமோத்தரத்தில் "ஆகமங்கள் அனைத்தினையும்" என்னும் செய்யுளானும் அதற்கடுத்த செய்யுளானும் அறியலாகும். "நால்வருக் கறமாதி பொருளுரைப்பத்—தென்பாலின் முகமாகி வடவாலிருக்கின்ற செல்வமே" என்பர் தாயுமானசுவாமிகள்.

இங்கே எடுத்துக்காட்டிய அதிபிரபலப்பிரமாணங்களினாலே வேதாகமங்களைத் தமிழ்நாட்டுட்பட்ட மகேந்திரமலையில் சிவபெருமான் தமிழிற்கூறினர் என்னுங் கற்பனை கானகத்துப் புலம்பலாயவாறுகாண்க.

(உரு) மெய்யுணர்ச்சி விளக்கமின்றி வெறும் போலிக்கட்டுப்பாடுகளைப் புணர்த்திப் பிற்காலத்தில் எழுதப்பட்ட வடமொழி ஆகமங்களைத்தென்னாடு ஏற்காது என்பதும் தமிழிலுள்ள சிறந்த ஆகமங்களைச்சமணர்கள் அழித்து விட்டனர் என்பதும் சைவப்புலவருடைய படைத்துரை. இவருக்குச்சியேட்டராயுள்ள மற்றொருவர் வடமொழிஆகமங்களை அருணந்தி சிவாசாரியர் பாதுகாத்துவந்தார் என்றும், இப்பொழுதுள்ள குருமார் அப்படிச் செய்யவில்லையென்றும் கூறி, தமிழ் ஆகமங்கள் கடலில் அகப்பட்டு விட்டதென்ற கட்டுக்கதையையும் சொல்லியிருக்கிறார். ஆகவே இவ்விருவர் கருத்துப்படியும் தமிழ் ஆகமங்கள் இருந்த இடமுந்தெரியாது போய் விட்டன என்பது நிச்சயம். ஆகமங்கள் ஆரியத்திலேயே உள்ளன என்று ஆளுடைய பிள்ளையாரும், அருணந்திசிவாசாரியரும், திருமூலயோகிகளும், சேக்கிழார் சுவாமிகளும்நமக்கு வெளிப்படையாக அறிவுறுத்தியிருக்கின்றார்கள், அவர்கள்திருவுள்ளத்திற்கு மாறுபட்டுப் பேசுவோர் சைவராவாரா? தமிழில் ஆகமங்கள் இருந்தன ஆயின் அந்தத்தமிழ் ஆகமங்களை இயற்றினேர் யாவர்? அதனை இயற்றியவர் தமது சிறு புஸ்தகத்தில் கூறியபடி சிவபெருமானே என்பாராயின், தென்னாட்டுச் சிவத்தமிழ்மக்கள் எவ்வளவு சிறந்த நூல்களையும் இறைவன் அருளினரெனக் கூறமாட்டார்கள் என்று 10-ம் பக்கத்திற் சொல்லிய தென்னை? தமிழ் ஆகமத்தோற்றம் எந்தநூலிற் சொல்லப்பட்டுள்ளது? ஆன்றோர்கள் யாராவது கூறியதுண்டா? இருபத்தெட்டு ஆகமங்களையும் சமணர் அழித்து விட்டனரா? அன்றிக்கடலில் அழிந்தனவா? தமிழ்நாடு தெற்கே கன்னியாகுமரிமுதல் வடக்கே வேங்கடம் வரையுண்டன்றோ! இப்பரந்த பூப்பரப்பில் சைவசமயத்தை அநுட்டித்தவர் அக்காலத்து ஒருவருமில்லையா? அவர்களிடத்தில் ஆகமங்களில் ஒன்றிரண்டேனும் அழியாதிருந்ததில்லையா? திருமந்திரம் திருவாசகம் முதலிய அருணூல்களைச் சமணர்கள் அழியாது பாதுகாத்துத்தந்த பரமகருணாநிதியாகிய பரமசிவன் தமிழில் ஆகமங்களாகிய முதனூல் இருந்து அழிந்ததாயின் மீட்டுந் தந்து ஆன்மகோடிகளை அருளாது விடுவானா? தாய்நாட்டிலிருந்த ஆகமங்களைச் சமணர்கள் அழித்துவிட்டால் சேய்நாட்டிலிருந்த ஆகமங்களுமா அழிந்துவிட்டன.

இருக்கு.

(உசா) இனி திருஞானசம்பந்தமூர்த்திகளது தேவாரப்பதிகங்களில் திரு விருக்குக்குறள் எனப்பெயர்கொண்டபதிகங்கள் காணப்படுகின்றன. இப் பெயர் எய்தியதற்குக்காரணம் இருக்கு வேதப்பொருளை அடக்கிக்கொண்டி ருத்தலினாலன்றோ! ஆனால் மற்றைய பதிகங்களில் இருக்குவேதப்பொருள் இல்லையோ என்று வினவினால் எல்லாம் இருக்குவேதப்பொருள் என்பதே விடையாகும். ஆனால் திருவிருக்குக்குறள் என்னும் பதிகமானது இருக்கு வேதப் பொருளை அடக்கிக்கொண்டிருப்பதுடன் இருக்கு வேதத்தின் ஒவ் வொரு பாடலும் அளவிற் குறுகியும் பொருளிற்பெருகியும் இருப்பதுபோல் இப்பதிகங்களும் இருப்பதின் நிமித்தமே என்று பெரியோர் கூறுவர்.

ஆரிய இருடியாகிய மார்க்கண்டேய முனிவர் சிவபெருமானைப் பூசித் துப் பேறுபெற்றவரென்பது புராணப்பிரசித்தம். அவர் வழிபாடுசெய்த சரி த்திரம்குறிப்பிடப்புகுந்த வேதபாரகராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார்,

நன்றுநகு நான்மலரா னல்லிருக்கு மந்திரங்கொண்
டொன்றிவழி பாடுசெய லுற்றவன்றன் னுேங்குயிர்மேல்
கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்
கொன்றைமலர் பொன்றிகழுங் கோளிலியெம் பெருமானே.

என்றருளிச்செய்தார். இத்தேவாரத்தில் வேதமந்திரங்கொண்டு அருச்சித்தார் என்னும் பொருள்பட "நல் இருக்கு மந்திரங்கொண்டு - வழிபாடு செயலுற் றவன்" என்றருளிச்செய்தார். வேதமந்திரங்கொண்டுவழிபடுவதை, "வேத த்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப் போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கும் வேளூரே" என்ற தேவாரத்திலுங் காண்க.

இன்னும் நமது திருமுறைகளிலே இருக்குஎன்னும் மொழி எத்தனை யோ இடங்களிற் காணவிருக்கின்றது. "ஆன பாட லுகந்த திருக்கையே" என்பது சிவபெருமான் இருக்குப் பாடலிற் பிரியமுள்ளவர் என்பதைக் கா ட்டுகின்றது. "இருக்கு வாய்மொழியாற் றனையேத்துவார் சுருக்குவார் துயர்" என்ற அருண்மொழி, இருக்குமொழியாற் றுதிப்பவருடைய துயரை நீக்குவார் என்று அறிவுறுத்துகின்றது.

"இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயில்"

"இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்"

"இருக்குவா யந்தணர்க ளெழுபிறப்பு ளெங்கும் வேள்வி யிருந்து
இருநிதியம் வழங்கு நகர்"

என்றற்றொடக்கத்தனவாகிய தமிழ்வேதப்பகுதிகள், அவை அருளிச்செய் யப்பட்ட காலத்தில் இருக்கு வேதம் அத்தியயனம் செய்யப்பட்டு வந்தமை யைப் புலப்படுத்துகின்றன. இங்கே சுட்டப்பட்ட இருக்கு என்பதைக் கற்ப னைக்கொள்கைப்படி தமிழ் எனக்கொள்ளின், அத்தமிழ்மறை இறக்குறையப் பத்தாயிரம் ஆண்டுகட்குமுன் கடல் கொண்டுபோய்விட்டதாமே! காலவாதி கள் கணக்குப்படி தேவாரத்தை இயற்றிய பெருமக்கள் காலம் ஆயிரத்தைஞ் ஞூறு ஆண்டுகளுக்குட்பட்டதே! அநேக ஆயிரம்வருடங்களுக்குமுன் மறைந்துபோன தமிழ்மறை தேவாரத்தை இயற்றியவர்கள் காலத்தில் அத்தி யயனஞ் செய்யப்பட்டுவந்தது எப்படி? இதனால் இருக்கு என்பது எக்கால மும் நிலைபெற்றுநிற்கும் ஆரியவேதமேயாம்.

திருமூலநாயனர்.

"இருக்குரு வாமெழில் வேதத்தி னுள்ளே" எனவும்
"ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்" எனவும்
"நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே"

எனவும், இருக்கு முதலாகிய வேதங்களையே வேதம் எனவும், காமிகம் முதலிய வடமொழி ஆகமங்களே ஆகமங்கள்எனவும் பெறவைத்து, இவற்றின் அந்தமாகிய வேதாந்தத்துக்கும் சிந்தாந்தத்துக்கும் பேதம் இன்மை விளக்கினர். திருமூலநாயனர் வேதாகமங்களை வடமொழியே யென்றுகொண்டு போற்றுகிறார். மேலைநாட்டறிஞரும் மறைமலைஅடிகளும் அவற்றின் புல்லிய தன்மையைப் புலப்படுத்துகிறார்களாம்; அவர்கள் திருமூலதேவரிலும்பார்க்க வேதாகம ஆராய்வில் மேம்பட்டவர்கள்போலும்.

"கண்டன மின்றியாம் கலியின் வண்ணமே."

## உருத்திரம்.

(உஎ) இனி, இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்றுவேதங்களும் திரயீ எனப்படும். இம்மூன்று வேதங்களுக்கும் நடுக்கணுள்ளது யசுர்வேதம். யசுர் வேதத்துக்கு நடுக்காண்டமாகிய நான்காம் காண்டத்தினுள்ளது "நமஸ்தே ருத்ரமந்யவ" உருத்திரரே உமது ஞானத்துக்கு நமஸ்காரம் என்றற்றொடக்கத்த சதருத்திரீயம் இச்சதருத்திரீயத்துள்ளது, உமையம்மையாரோடு கூடிய சிவபெருமானுக்கு நமஸ்காரம் என்னும் (நம: ஸோமாயச) என்றற்றொடக்கத்த அநுவாகம். இந்த அநுவாகத்துள்ளது ஸ்ரீ பஞ்சாக்ஷரம். இதன் நடுவில் உள்ளது ஈரெழுத்து. இதனை "அருமறையின் அகத்தானை" எனத் திருநாவுக்கரசுசுவாமிகள் கூறியருளியவாற்றுனும்,

மும்மறையி னடுமறையின் முடிவிலெழு காண்டத்துச்
செம்மைதரு நடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையி
னம்மநடுச் சங்கிதையி னுதியீ ரெழுத்துநடுப்
பொம்மலுற வயர்மநுவின் பொருளாவா னெவன்மைந்த.

என்ற சிவதத்துவ விவேக மொழிபெயர்ப்பாலும் உணர்க.

ஆகவே நான்குவேதம் ஆறங்கம் புராணம் நியாயம் மீமாஞ்சை மிருதி ஆயுள்வேதம் தனுர்வேதம் காந்தர்வவேதம் அருத்தவேதம் என்னும் பதினெண்வித்தைகளுள்ளும் சுருதி மேலானது; அச்சுருதியுள்ளும் ஸ்ரீருத்திரம் மேலானது; ருத்திரத்துள்ளும் ஸ்ரீபஞ்சாக்ஷரம் மேலானது; பஞ்சாக்ஷரத்துள்ளும் இரண்டெழுத்து மேலானது. ஆகவே, வேதபுருஷனுக்கு இந்த உருத்திரமானது கண்ணும், இதனுள் இருக்கும்பஞ்சாக்ஷரம் கண்மணியுமாம். இதனைச் சிவதத்துவ விவேக விருத்தி, சதுர்வேததாற்பரியசங்கிரகம் என்பவற்றுட் காண்க.

சிவனிடத்து இடையறாத மெய்யன்போடு இந்த உருத்திரத்தை நியமமாக ஓதுவோர் முத்திபெறுவர். அறுபத்துமூன்றுநாயன்மாருள் ஒருவராகிய உருத்திரபசுபதிநாயனர் இந்த (வடமொழி யசுர்வேதத்தின் மத்தியில் விளங்கும்) ஸ்ரீ உருத்திரத்தைத் தாமரைத்தடாகத்திலே கழுத்தளவு ஜலத்தில் நின்று இரவும் பகலும் ஓதி வீடுபெற்றனர். அது,

1. ஆய வந்தண ரருமறை யுருத்திரங் கொண்டு
மாய னாரறி யாமலர்ச் சேவடி வழுத்துந்
தூய வன்பொடு தொடர்பினி லிடையருச் சுருதி
நேய நெஞ்சின ராகியத் தொழிற்றலை நின்றார்.

2. அரும றைப்பய னாகிய வுருத்திர மதனை
வருமு றைப்பெரும் பகலுமெல் லியும்வழு வாமே
திரும லர்ப்பொகுட் டிருந்தவ னனையவர் சிலநாள்
ஒருமை யுய்த்திட வுமையிட மகிழ்ந்தவர் உவந்தார்.

3. நீடு மன்பினி லுருத்திர மோதிய நிலையால்
ஆடு சேவடி யருகுற வணைந்தன ரவர்க்குப்
பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங்
கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற.

எனவரும் அருண்மொழித்தேவர் வாக்கான் அறியப்படும்.

திரு உருத்திரம் என்பது, ஸ்ரீருத்திரம் என்றும், ஸ்ரீருத்திரபிரச்னம் என்றும், ஸ்ரீருத்ரசூக்தம் என்றும், ஸ்ரீருத்ராநுவாகம் என்றும் வழங்கப்படும். இதனை நியமமாக அத்தியயனம் செய்யும் முறை பயன்முதலியன இதற்குப் பட்டபாஸ்கரர் செய்த பாடியத்தால்உணரப்படும். சேக்கிழார் மூர்த்திகள் "அருமறை உருத்திரம்" என்றும், "அருமறைப்பயனாகிய உருத்திரம்" என்றும் இதனைப் போற்றுகின்றார். அருமையாவது, இறைவன் வாக்காதலும்,

வேதத்தை விட்ட அறமில்லை வேதத்
தோதத்தகு மறமெல்லா முள.

என்று கூறப்படுதலுமாம். இறைவன் அருளால் அன்றிக் கருவிநூல் கொண்டு மெய்ப்பொருள் அறியவாராமையுமாம். ஞானத்தின் முடிந்தநிலை திருவுருத்திரத்தாற் பெறப்படுதலின், அது "அருமறைப்பயன்" என்று சொல்லப்பட்டது. அன்றியும் ஆன்மாக்கள் பக்குவத்திற்கேற்பப் பலதேவர்களை வழிபடுவர். அவ்வாறு வழிபடப்பெறும் இந்திரன், அக்னி, யமன், பிரமன் முதலிய தேவர்களை எடுத்தோதி முகமனால் அவர்க்கு உபாசனைவேதத்துட் கூறப்படும். ஆயினும், வேதமானது திருவுருத்திரத்தைத் தன்மத்தியில் வைத்துப் போற்றுமுகத்தால் சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்ற உண்மையை நிலைநிறுத்துகின்றது. ஆதலினாலே திருவுருத்திரமானது "அருமறைப்பயன்" எனக் கூறப்பட்டதாமென்றும் உணரலாகும்.

இன்னலங் கடலுட்பட்டோர் யாரையு மெடுக்கு மாற்றா
லுன்னரும் பரமமூர்த்தி யுருத்திர னெனும்பேர் பெற்றான்.

என்னும் கந்தபுராணத் திருவிருத்தப்படி பிறவித்துன்பம் என்னும் பெருங் கடலுள் அகப்பட்டுழலும் ஆன்மாக்களையெல்லாம் திருவருள் என்னும் தெப்பத்தினால் எடுத்து முத்திக்கரை சேர்ப்பவன் என்பது உருத்திரன்என்னும் சொற்குப் பொருளாம். பதினொருருத்திரர் நூற்றெட்டு உருத்திரர் புவனபதிகளான உருத்திரர் முதலிய எல்லா உருத்திரரினும் மேற்பட்டு சுத்தமாயா புவனாந்தம் சங்கரிக்கும் மகா உருத்திரராகிய சிவபிரானுகும் முழுமுதற் கடவுளே திரு உருத்திரத்தால் துதிக்கப்பட்டவர் என்றறிக. "உம்பரானை உருத்திர மூர்த்தியை" என்பது தேவாரம். உருத்திரபசுபதிநாயனார்

புராணத்துக்கு ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் எழுதிய சூசனமும் ஸ்ரீமத் C. K. சுப்பிரமணியமுதலியார் எழுதிய உரையுங்காண்க.

அருண்மொழித்தேவர் அருளிய இச்சரித்திரத்தானே ஸ்ரீஉருத்திரத்தை மெய்யன்போடு ஓதிச் சிவபெருமானைத் துதிப்போர் சிவபுரியிற் சேர்வர் என்று விளங்குகின்றது. இதுபற்றியன்றோ திருமந்திரமும் "மதிஞர் வளமுற்ற-வேதத்தையோதியே வீடு பெற்றார்களே" என்று அறிவுறுத்துவதாயிற்று. இதனால், அருண்மொழித்தேவரும் திருமூலரும் இருக்குமுதலிய மறைகளையே வேதங்கள் என்று கொண்டனர்என்ற உண்மை புதுத்துறையாருடைய ஆராய்ச்சி அறிவிற் புலப்படும் என்று நம்புகின்றோம்.

## அகமருடணம்.

(உஅ) ஒருதினம் தந்தையாராகிய சிவபாதவிருதயர் ஸ்நானம்பண்ணப் போகும்பொழுது, தனயராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பரமசிவனுடைய திருவருள்கூட, அவரைத்தொடர்ந்து அழுதுகொண்டு பின்சென்றார்; சிவபாதவிருதயர் அவரைக்கொண்டுசென்று, ஆலயத்தினுள்ளிருக்கும் தீர்த்தத்தை அடைந்து, கரையிலே வைத்துவிட்டு, தாம் தீர்த்தத்தினுள்ளே இறங்கி, நின்றுகொண்டு சங்கற்பம் அகமருஷண சூக்தபடனம் முதலியன செய்தார் என்பது சரித்திரம். இதனைச்சேக்கிழார்சுவாமிகள்,

நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
சீராருந் திருமகனார் காண்பதன்முன் செய்ததன்பின்
ஆராத விருப்பினு லகமருடம் படியாநீர்
பேராது மூழ்கினார் பெருங்காவல் பெற்றாராய்.

எனக்கூறுவதினால் அறியலாகும். இச்செய்யுளில் தருப்பித்தல்என்பது, சூரியன் முதலியோரை எண்ணி உரியபாவனைமந்திரங்களால் நீரை அள்ளி இறைத்தல். அகமருடம் படிய என்பது அகமருடஸ்நானம் என்னும் நியமத்தினைச் செய்யும்பொருட்டு என்பது. அகமருடணஸ்நானமாவது:- அகமருடணசூக்தத்தை நீரில்நின்று மூன்றுமுறை செபித்துக்கொண்டு மூழ்குதல். இது உயிர்த்தூய்மை பற்றியது.

அகமருஷணசூக்தம் இருக்குவேதத்திற் பத்தாவது மண்டலத்துள் நூற்றத்தொண்ணூறாவது சூக்தம் என்ப. அகமருஷணம்-வடசொல்; பாவத்தைக் கெடுப்பது என்ற பொருள் தருவதாம்.

இன்னும் திருஞானசம்பந்தநாயனர் புராணம் அ௦-வது செய்யுளில் "இருக்குமொழிப்பிள்ளையார்" என்றும் கூ௬-வது செய்யுளில் "என்றினைய பலகூறி இருக்குமொழி அந்தணரும்" என்றும், தடுத்தாட்கொண்ட புராணம் ௧௧௬-வது செய்யுளில் 'இருக்கோலமிடும் பெருமான்' என்றும் வரும் அருண்மொழிகளும் காண்க.

## காயத்திரி.

(உகூ) மேலும், பரமசிவனே பரம்பொருள் என்று அறிவுறுத்துமாறு, ஹரதத்தாசாரிய சுவாமிகள் கூறியருளிய இருபத்திரண்டு ஏதுக்களுள்ளும் முதற்கண் வைத்தெண்ணப்பட்ட "உயர்காயத்திரிக்குரிப்பொருளாகலின்" என்னும் காயத்திரிமந்திரமும் இருக்குவேதம் ௩. ௬உ. ௧௦லும், கிருஷ்ணயசுர்வேதம் ௧-௫-௬-௪லும், சுக்கிலயசுர்வேதம் ௩௬-௩லும், சாமவேதம்

ஏழாவது பிரபாடகம் ௪௦லும் கூறப்பட்டதேயாம் என்றுணர்க. காயத்திரி மந்திரப்பொருள் சிவபெருமானேயாம் என்பது சதுர்வேத தாற்பரியசங்கிரகம் முதலியவற்றானும் உணரப்படும்.

### சிவதத்துவ விவேக மொழிபெயர்ப்பு.

**சிவஞானசுவாமிகள்.**

இருபிறப் பாளர் நியதியாய் வழுத்தற் கெடுத்தல்கா யத்திரி யன்றே
வருமதற் குயர்ந்த தெய்வமீ யென்றே வழுத்திடு மிதுபெரு வழக்கே.

சிவஞானபோதபாடியம், பிரமாணவியல் சூ க, அதி. உ. உயர்காயத்திரிக் குரிப்பொருளாகலின்,

..................................................................
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு
ளும்பர்க ளெவர்க்கு முயர்ந்தோ
னென்பது தெளிய வியல்புணர்ந் தோரே.

என்றிங்ஙனம் அரதத்தாசாரியர் கூறிய இருபத்திரண்டு ஏதுக்களானும் பரமசிவனே பரம்பொருளென்பது தெளியப்படுதலின் அவனே முழுவதும் ஒடுக்கி உளதாக்கும் சருவகாரணனென்பது உணர்ந்து கொள்க.

## சாமம்.

(கூ௦) சாமவேதம் என்னும் மொழிப்பிரயோகம் தேவார சுருதியிற் பல இடங்களிற் காணப்படுகின்றது. “தயங்கு சாமவேதயோர் கீதமோதியத் தசமுகன் பரவு நாமதேயமதுடையார்” எனக்கௌணியர் குலதீபமாகிய ஸ்ரீஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாய்மலர்ந்தருளினர். இங்கே சாமவேதம் என்பது, வடமொழிவேதத்தையேகுறிக்கும். இது சாமவேதகீதத்தை இராவணன் பாடினான் என்று நன்கு துலக்குகிறது. “சாகையா யிரமுடையார் சாமமு மோதுவ துடையார்” என்ற பிள்ளையார்வாக்கும் சாமவேதம் ஆயிரம் சாகைகளையுடையுதென்பதை விளக்குகின்றது. “சாந்தோக சாமமோதும் வாயானை” என்ற அப்பர்சுவாமிகள் வாக்கும், சாமவேதம் சாந்தோக்கிய உபநிடதத்தை உடையமதென்பதைச் சூசிப்பிக்கின்றது. “சாமவேதக் கந்தருவம் விரும்புமே” என்ற பகுதி சாமவேதமாகிய கானத்தைச் சிவபெருமான் விரும்புபவர் என்றுசொல்லுகின்றது. “சாமத்து வேதமாகி நின்றதோர் சயம்பு தன்னை” என்பது சாமவேதரூபாகச் சிவனார் இருக்கின்றார் என்று விளங்குகின்றது. இவ்விசாரத்தால் தேவாரப்பாடல்களிலும் பிறவிடங்களிலும் காணப்படும் சாமவேதம் என்பது வடமொழிச் சாமவேதத்தையே சுட்டுமென்பது நன்கு நிறுவப்படும். ஸ்ரீ ஞானசம்பந்தப்பிள்ளையார் சாமவேதம் என்னும் கீதத்தை இராவணன்பாடினான் என்று அருளிச்செய்தவாறே, இராவணன்சரிதம் சொல்லும் தமிழ் இராமாயணத்தும், கூர்மபுராணத்தும் சொல்லப்பட்டது.

தமிழ் இராமாயணம் உத்தரகாண்டம் வரையெடுத்த படலத்தில்,

“வான்றிகழ் வெள்ளி வெற்பின் கீழுற்று வருந்து கின்ற
வூன்றிகழ் வேலினானை யமைச்சர்கா முற்று நோக்கித்
தேன்றிக ழிதழி யான்றன் திருச்செவி சார நின்கை
கான்றிகழ் வீணை யாகப் பாடுதி சாம மென்றார்” என்றும்,

"பன்னரும் சாம கீதம் பரிவுடன் பாட லுற்றான்."

என்றும் கூறப்படுகின்றது. கூர்மபுராணத்தில்,

"பரமனைப் பழிச்சி வெய்யோ னோதுணர் சாமகான
மறிவொடும் பாட லுற்றான்."

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இராவணன் இளமைப்பருவத்தில் கல்விகற்றதைக் கூறுமிடத்து, 'மனு நூலும் வேதமனைவ யோரா யிரமும் விளங்கு கலையும் தசக்கிரீவ னோத' என்று இராமாயணம் கூறுகின்றது. இதனால் இராவணன் ஆரிய வேதங்களைக் கற்றறிந்தவனென்று துலங்குகின்றது. வால்மீகிராமாயணம் சுந்தர காண்டத்தில் ௮-ம் சருக்கத்தில் அனுமான் இலங்காபுரியிற்கண்ட வளங்களைக் கூறும் சமயத்தில் "அந்நகரத்தில் வேதகோஷமும் அக்கினிஹோத்திரமும்" விளங்குவதைக் கண்டதாகச் சொல்லப்பட்டுள்ளது. மேலும், "தீதிலா மலையெடுத்த அரக்கன் நீதியால் வேதகீதங்கள் பாட" என்றும், "முன்கையால் நரம்புவெட்டி முன்னிருக் கிசைகள் பாட" என்றும் தேவாரம் சொல்லுகின்றது. இக்காரணங்களால் இராவணன் பாடியது வடமொழிச் சாமவேதமே என்றும், அதனைத் தமிழ்வேதம்பாடிய திருநெறிச்செல்வர்கள் பல இடங்களிலும் கூறியிருக்கின்றார்கள் என்றும் தாபிக்கப்படுகின்றது. "தொல்லை நான்மறை" என்று வேதங்களைக் குறிப்பிடுவர் சேக்கிழார் சுவாமிகள். தொன்மை என்பது பழமை. மறைகளின் தொன்மையாவது உலகங்களைப் படைத்தபோதே உலகத்துயிர் உய்யும் வழியினையும் உடனே வகுத்து மறைகளையும் இறைவன் அருளினர் என்பதனாலாம்.

ஆதலால் வடமொழிக்கும் தென்மொழிக்குந் தந்தையாயினார் சிவபெருமானே என்றும், ஆதலால் ஆரியமுஞ் செந்தமிழும் ஒன்றையொன்று விரோதியாமல் நாடெங்கும் பரவியிருக்கின்றன என்றும், சிவபெருமானே இறைவனென்றும் வேதசிவாகமங்களே அவனாலே அருளப்பட்ட முதனூல்கள் என்றும், நமது சைவப்பெரியார்கள் அந்நூல்களைத் தழுவியுள்ளார்கள் என்றும் நன்கு துணிந்துகொள்ளலாம். இங்ஙனமிருத்தலால் தென்னாடுடைய இறைவன் வேறு; வடநாடுடைய உருத்திரன் வேறு என்றகொள்கை விசித்திரமானதேயாம்.

## கிரியை.

(௩௦) "செம்புக்கு நூல்சுற்றி தேங்காய்முடிக்குத் தர்ப்பையை இட்டு நம்புங்கள் ஆகமங்களை என்று சைவத் தமிழ்மக்களை எமாற்ற இனி முடியாது. ஆகமங்கள் எங்களுக்கு வேண்டாம். அன்புநெறி எங்களுக்கு வேண்டும். ஆரியமந்திரங்கள் எங்களுக்கு வேண்டாம். அருட்பாக்களாகிய தேவார திருவாசகங்கள் எங்களுக்கு வேண்டும். சங்குக்கு நீரூற்றும் சங்காபிஷேகம் எங்களுக்குவேண்டாம்" என்றற்றொடக்கத்தனவாக எழுதினார் சைவப்புலவர். இதனால் இவர் ஆகமங்களைத் தள்ளுகிறார் என்பதும், அவற்றுட்செய்யப்பட்ட சைவக்கிரியைகளையும் தள்ளுகிறார் என்பதும் தேவாரம் திருவாசகம் திருமந்திரம் முதலியவற்றை யொப்புக்கொள்ளுகிறார் என்பதும் பெறப்படுகின்றன. சைவப்புலவருக்கும் எமக்கும் ஆராய்தற்கேற்ற பொதுநிலையம் எற்பட்டிருத்தலின் அப் பொதுநிலையமாகிய தேவாரம் முதலிய பிரமாணங்களைக்கொண்டு அவர்கொள்கை பொருந்தாது என்பதைக் காட்டினோம். மேலும் அங்ஙனம் ஆராய்வாம்.

(௬௧) பெறுதற்கரிய மாநுடசரீரத்தை இறைவன் நமக்குத்தந்தது, தம்மை வழிபட்டு முத்தியின்பம் பெறுதற்பொருட்டாம். அவ்வழிபாட்டு முறை சரியை கிரியை யோகம் ஞானம் எனநான்கு வகைப்படும். இவை முறையே அரும்பு மலர் காய் கனி போல்வனவாம். சரியை யில்லார்க்குக் கிரியை பயன் கொடாது; கிரியை செய்து அதிற் சித்தி அடையாதவருக்கு யோகம் பயன்கொடாது. யோகம் இல்லாதவருக்குஞானம் பயன்கொடாது. ஞானமில்லாதவருக்கு முத்தி இன்பம் கைகூடாது. ஆகவே, இவை நான் கும் ஒன்றற்கொன்று ஏற்றம் பெற்றுப் படிபோல்உள்ளன. இது பற்றியே ஸ்ரீ தாயுமானப்பெரியாரும்,

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனி போலன்றோ பராபரமே.

என்றருளிச்செய்தார். இந்த நான்கனுள் சரியை கிரியை யோகம் என் னும் மூன்றும் பொதுப்படக்கிரியை என்றே வழங்கப்படும்.

இனி, கிரியையாவது புஷ்பம் திருமஞ்சனம் தூபம் தீபம் அமுது முதலியவைகளைச் சேகரித்து, பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந் திரசுத்தி இலிங்கசுத்தி என்னும் ஐவகைச்சுத்தியுஞ்செய்து, முப்பத்தாறு தத்துவங்களால் அமைக்கப்பெற்ற ஆசனத்தின் மீதாகச் சிவபெருமானை எழுந்தருளச்செய்து பூசித்து அக்கினிகாரியமுஞ் செய்தலாம். பஞ்சசுத்தி செய்து பூசித்தால் ஞானம் விளங்கும் என்று தாயுமான சுவாமிகள் அறிவு றுத்துகின்றார்.

"பஞ்சசுத்தி செய்துநினைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சியஞானம் விளங்கும் பராபரமே."

என்பது அவருடையஅருள்வாக்கு. பூர்வபக்கத்தினர் இதனை வரவேற்று மகிழ்வாரா? அன்றி ஒதுக்கி இகழ்வாரா?

(௬௨) பலகோடி சிறுதெய்வ வணக்கங்கள் நிரம்பியுள்ளன என்று ஆராய்ச்சிக்காரரால் இகழப்பட்ட இருக்குவேதத்திலேயே "தேவர்கள் பொருளும் அருளுமாம் இன்பத்தை அடையுமாறு சிவபெருமானுடைய விசித்திரரூபமாகிய மகாலிங்கமூர்த்தியை அபிஷேகாதி பூசைகள் செய்தார் கள். என்று சிவலிங்கபூசை செப்பப்பட்டுள்ளது. இதனை "யாவர்க்குமாம் இறைவர்க்கொருபச்சிலை" என்று திருமந்திரம் உணர்த்துகின்றது. "சனங் களிடத்து அந்தர்யாமியாயிருக்கும் சிவபெருமானை எவர் இருதயத்தின் கண்ணே அருட்சத்தியோடு கூடத்தியானிக்கின்றாரோ, அவர் அன்னத்தை நாவினுற் கிரகிக்கின்றார் என்றும் இருக்குவேதம் கூறுகின்றது. எவர் அருட் சத்தியோடுகூட வந்திக்கற்பாலராகிய சிவபெருமானை எக்காலமும் தியா னிக்கின்றாரோ, அவர் இரசநிறைந்த அமிர்தோதகத்தை நாவினுற் கிரகிக் கின்றார். எவர் பவாகியாம் சத்தியோடுகூடச் சிவனைத் தியானிக்க வில் லையோ அவர் மலத்தையே நாவினுற் கிரகிக்கின்றார்என்று பராசரபுராணம் விளக்குகின்றது. ஆகமமொழிபெயர்ப்பாகிய சைவசமய நெறியும்

"அலரினைச் சூட்டா தமலன்றாளி னருந்தன்ன
மலமாம் பிணமுமா மாசு"

என்பதனுற் குறிப்பிடுகின்றது.

தனதுதேகம் நிர்மலமாயபோது, அதனைச் சிவாலயமாகப் பாவித்து, அவ்வாலயத்துள்ளே உள்ள ஆன்மாவைச் சிவரூபமாய்க்கொண்டு, அச் சிவ பெருமானை உயிராகக்கொண்ட உடலாகிய அந்த நிர்மல ஆன்மாவிலே அந் தர்யாகம் செய்யற்பாற்று என்பது வாதுளாகமம். இக்கருத்தைச் சிவபூசை என்ற பகுதியிலே,

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே.

எனத் திருமந்திரம் கூறுவதையும் உற்றுநோக்குக. அந்தர்யாகமாவது பூசைக்குவேண்டிய உபகரணங்களை எல்லாம் மனத்தாலே சங்கற்பித்துக்கொண்டு ஞானத்தாலே உள்ளே பூசிக்கிறபூசையாம்.

அந்தரியா கந்தன்னை முத்தி சாதனமா
  வறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
  கண்டனவெ லாமனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற்
  சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
  வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

என்பது சித்தியார் சாதனஇயல் கூ-ம் சூ கூ-ம் அதி. சைவப்புலவர் உட்பூசையைத் தள்ளுகிறாரா? புறப்பூசையைத் தள்ளுகிறாரா? அல்லது இரண்டையுமா?

(கூகூ) சரியை முதலிய நாற்பாதப்பொருளையும் தமிழிற் கூறவந்த திருமூலநாயனார்,

"நீதங்கு மங்க நியாசம் பண்ணி"

என்றருளுகின்றார். இங்கே சொல்லிய அங்கநியாச மந்திரமும் விளக்கமும் சிவாகமங்கொண்டே அறிந்து கோடல்வேண்டும்.

இன்னும் திருமூலநாயனார், சிவாகமங்களிற் பரக்கச்சொல்லப்பட்டுள்ள பதினாறு உபசாரங்களாலும் பரமசிவனை அருச்சித்தலைக்குறிப்பிட்டருளுகின்றார். திருமந்திரம் ஏழாந் தந்திரம் சிவபூசை என்னும் பகுதியில்

மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ளீச னிலைபெறு காரண
மஞ்சமுதமா முபசார மெட்டெட் டொடு
மஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே,

என்று சொல்லப்பட்டுள்ளது. எண்டு உபசாரம் எட்டெட்டு என்றது சிவாகமங்களிற் சொல்லப்பட்ட சோடசோபசாரங்களை. சோடசம்- பதினாறு. அவையாவன:— (க) ஆவாகனம், (உ) தாபனம், (௩) பாத்தியம், (௪) ஆசமனீயம், (௫) அருக்கியம், (௬) அபிஷேகம், (எ) வஸ்திரம்,

(அ) உபவீதம், (க) பூஷணம், (க0) கந்தம், (கக) புஷ்பம், (கஉ) தூபம், (கஙு) தீபம், (கச) நைவேத்தியம், (கரு) நமஸ்காரம், (கசு) உத்வாகனம், என்று காரணகமம் செப்பும். இவை மந்திரம், கிரியை, பாவனை என்னும் மூன்றினாலும் செய்யப்படுவன. இவை சிவாகமஉணர்ச்சி உள்ளவருக்கு மாத்திரமே புலப்படுவன. வடமொழியை அறியாதவருக்கும், தீக்ஷைபெற்றுச் சிவாகமங்களை ஓதாதவருக்கும் இவை வெகுதூரம். அப்பதினாறு உபசாரங்களின் உண்மைப்பொருளை ஆகமங்களிற் கண்டவாறு முழுவதும் எழுதப்புகின் மிக விரியுமாதலின், சிலவற்றையே ஈண்டெடுத்துக் காட்டுவாம்.

சிவபெருமானை ஆவாகனம் செய்யுமிடத்து, சோடசகலாப் பிராசாத மத்தியமயனாகத் தன்னைப் பாவித்துப் பிராசாதமந்திர செபா நுட்டானக்கிரமமாகவே ஆவாகனம் செய்தல் வேண்டுமென்று சிவாகமம் செப்பும். அது மேதாகலை முதலிய பதினாறு களாசத்திகளையுடையதாம். அந்தஆவாகனம் பூசையின் பொருட்டுச் சிவபெருமானை லிங்கமுதலியவற்றில் வரவழைத்து அபிமுகமாகச் செய்தல் என்னும் பாவனையாம். எங்கும் வியாபித்திருக்கும் கடவுளை ஆவாகனம் செய்தல் எங்ஙனம் எனில்; விறகுமுழுவதும் நிறைந்திருக்கும் நெருப்பைக் கோலினாற்கடைய அது ஓரிடத்திலே பிரகாசித்தல்போல எங்கும் நிறைந்திருக்கும் கடவுளை ஓரிடத்திற் சிரத்தையுடன் அழைத்து அபிமுகமாகச்செய்தல் என்று சிவாகமம்கூறும். பிரதிட்டாகாலத்திலே சர்வசங்காரகாலம் அளவாக சிவலிங்கத்திற் சாந்நித்தியராதற்காகச் செய்யப்படும் சீவந்நியாசம் சிற்பிரகாச ஆவாகனம் எனப்படும். தினந்தோறும் பூசாகாலத்தில் சிவலிங்கத்தில் எழுந்தருளியிருக்கும் சதாசிவமூர்த்தியினுடைய நான்கு முகங்களிலும் வியாபித்திருக்கும் ஈசானமுகம் தன்னைப் பார்க்கும்படி செய்வது அபிமுகீகரணம் எனவும் சித்தாந்த சாராவளிகூறும்.

"மேதாதி யீரெட்டு மாகிய மெல்லியல்"
"மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி"

"பான்மொழி பாகன் பராபரன் றானாகு
மான சதாசிவன் றன்னையா வாகித்து
மேன்முக மீசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னாமே"

"ஆசற் றகத்தினி லாவாகனம் பண்ணிப்
பேசிப் பிராணைப் பிரதிட்டை செய்து"

எனத்திருமூலர் திருமந்திரத்து வருவதுகொண்டு இவ்வுண்மை தெரிந்து கொள்ளலாம். பிரதிட்டை செய்வதற்குக் கும்பம் அக்கினி முதலியவை வேண்டப்படும். கும்பத்துக்கு நூல் சுற்றவேண்டாம் என்றாவது பிரதிஷ்டை முதலிய கிரியைகள் செய்தல் குற்றம் என்றாவது திருமந்திரத்திற் சொல்லியிருக்கிறதா? வேறெதில் உள்ளது?

அபிஷேகத்திரவியங்களைக் கூறுமிடத்துச் சைவசமய நெறியில்,

ஆட்டிடுக கந்த தயிலமுத லதன்பின்
ஆட்டிடுக வானைந் தினையு மார்ந்து.

[சந்ததயிலம்-சந்தனாதியெண்ணெய்; ஆனைந்து-பஞ்சகவ்வியம்.]

பஞ்சாமிர் தம்பா லதன்பின் றதிநெய்தேன்
எஞ்சாக் கரும்பி னிரதம்.

[ததி-தயிர்; கரும்பினிரதம்-கருப்பஞ்சாறு.]

கனியுதகந் தெங்கிளநீர் சந்தநீர் கும்பந்
தனில்விதியாற் றூபித்த நீர்.

கனியுதகம்-பஞ்சபலோதகம்; அவையாவன:- எலுமிச்சம் பழச்சாறு, நாரத்தம் பழச்சாறு, தமரத்தம் பழச்சாறு, குளஞ்சிப் பழச்சாறு, மாதுளம் பழச்சாறு என்பனவாம். கந்தநீர்-சந்தனக்குழம்பு. கும்பந்தனில் விதியாற் றூபித்தநீர் என்றமையினால் செம்புக்கு நூல்சுற்றி, தேங்காய் மாவிலை கூர்ச்சம் முதலியவற்றினால் அலங்கரித்து விதிப்படி பூசிக்கப்பட்ட நீர் என்பது பெற்றாம்.

என்னு மிவையு மினியபத மந்திரத்தைப்
பன்னியுரைத் தாட்டுக பாங்கால்.

இனிய பதமந்திரத்தைப் பன்னியுரைத் தாட்டுக என்பதனால் அபிஷேகம் பண்ணும் மந்திரம் கூறப்பட்டவாறு காண்க. பதமந்திரத்தின் பெருமை நோக்கியே பதமந்திரம் எனவாளா கூறாது, இனிய என்று அடைகொடுத்துக் கூறினார் என்க. இதுவும் ஆரியமந்திரம் அன்றோ!

பத்தியினா லாட்டிடுக சங்குளுறும் பாணியினை
வத்திரத்தான் மேலீர மாற்று.

சங்கினுள் இருக்கும் ஜலத்தைப் பத்தியினால் அபிஷேகம்செய்க என அடைகொடுத்துக் கூறியதன் காரணம் அதன் பெருமை நோக்கியேயென்றுணர்க. அபிஷேகத் திரவியங்களின் பலனைச் சிவாகமம் விளக்கிக்கூறும். விரியுமாதலின் இங்கே சொல்லப்படவில்லை.

### திருநாவுக்கரசு சுவாமிகள்.

தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியி னன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
இண்டைகொண் டேற நூக்கி யீசனை யெம்பி ரானைக்
கண்டனைக் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே.

என்றருளினார். இத்திருமுறையில் வரும் இருக்கோதி ஆட்டிஎன்பதற்கு வடமொழி வேத மந்திரத்தைச் சொல்லி அபிஷேகித்து என்பது பொருள். இது உண்மையா? கட்டுக்கதையா? வேறா? மேலும்,

"ஆவிலைஞ் சுகந்தாடு மவன் கழல்"

"செய்ய மேனியன் தேனொடு பால்தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்."

"பாலினா னறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினான் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்த."

எனவரும் தமிழ்வேதங்களும் அபிஷேகச் சிறப்பைக் கூறுமென்றுணர்க.

அத்த னவதீர்த்த மாடும் பரிசுகேள்
ஒத்தமெய்ஞ் ஞானத் துயர்ந்தார் பதத்தைச்
சுத்தம தாக விளக்கித் தெளிக்க
முத்திய மென்றுநம் மூலன் மொழிந்ததே.

என்பது திருமந்திரம். இப்படியே சைவநூல்களில் எல்லாம் சொல்லப்பட்டிருப்பவும், ஒரு சைவப்புலவரென்றவர் அபிஷேகம் வேண்டாம் என்று கூற முற்பட்டதென்னையோ?

### ஆறுமுகநாவலர் சைவதூஷணபரிகாரம்.

"இலிங்கங்களை அதிட்டித்து அருள்செய்யும் கடவுளுக்கு எண்ணெய் பால், தயிர், நெய், தேன், இளநீர் முதலியவைகளினால் விதிப்படி அபிஷேகம் பண்ணுதல் புண்ணியமென்று சைவாகமங்கள் சாற்றுகின்றன. ...... இப்படியே உன் சமயநூலிலே அபிஷேகம் விதிக்கப்பட்டமை கண்டும், காணுதார்போல நீ நாங்கள் அபிஷேகம் பண்ணுதலைக்கண்டு, விக்கிரகங்களுக்கு அபிஷேகம் பண்ணினதினாலே பயனில்லை என்று பிதற்றுவது நீதியா?"

அகில், கர்ப்பூரம், குங்குமப்பூ முதலிய பொருள்கள் கலந்த சந்தனத்தைச் சாத்துகிறவர்கள் பிரபஞ்சவைராக்கியமுடையவர்களாய்ச்சிவபுரத்தை அடைவார்கள் என்றும், ஆன்மாவிற்றிருவருட்சத்தி பதிதல் இதன் பாவனை என்றும் ஆகமம் கூறும். சந்தனக்குழம்பு சாத்துதலின் பெருமையை மூர்த்திநாயனார் சரித்திரத்தால் உணர்க.

### திருநாவுக்கரசு நாயனர்.

"சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்ததோ ளானை."

### திருமந்திரம்.

"சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கற்பூரங் காரகிற்
பாங்குபடப் பனிநீராற் குழைத்து வைத்த
தாங்கே யணிந்துநீ ரர்ச்சியு மன்போடே."

புஷ்பம், அறுகு, அக்ஷதை இவைகளைத் திருமுடியிற் சாத்துதல் சுத்தசைதன்னியமாகிய ஆனந்தம் பெருகுதற்காகும் என்று ஆகமம் கூறும்.

### சதாசிவரூபம்.

"நறுமல ரதனை நல்வீட் டின்பங்
குறுகுத லேது வாகவுங் கொடுத்து."

### திருமந்திரம்.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
வண்ணலது கண்டருள் புரியா நிற்கு
மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே."

"அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூகமு மாதவி மந்தாரந்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே.

ஆன்மாவை மறைத்துக்கொண்டிருக்கும் ஆணவமலசத்தியாகிய அறியாமையைக் கிரியாசத்தியைக்கொண்டு, சிவபெருமான் நீக்கும் குறிப்பாகும் தூபம் கிரியாசத்திரூபம் என்று சிவாகமம் செப்பும்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

"வெந்த குங்கிலி யப்புகை விம்மவே
கந்த நின்றுல வுங்களிப் பாலையார்"

"தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர்கொண்
டங்கையாற் ரெழுதேத்த"

என்று தொண்டர் பூசிப்பதைக் கூறியருளினர்.

சிற்சத்தியின் வாசமாய் ஞானவிளக்காய்இருப்பது தீபமாகும். சிவசந்நிதானத்தில் தீபமேற்றி வருபவர்களுக்குச் சிவபிரான் அபமிருத்துநிவாரணத்தையும், பாபக்ஷயத்தையும், சகலசித்திகளையும், ஞான அறிவையுங் கொடுத்தருளுவார் என்று சிவாகமம் செப்பும். சதாசிவரூபத்தில்,

ஞான விளக்க நண்ணுதற் பொருட்டுத்
தூப தீபந் துதைந்தினி தளித்து. எனவும்

தேவாரசுருதியில்,

விளக்கினர் பெற்றவின்ப மெழுக்கினற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர்தொடுத்தாற் றூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பிலை கீதஞ்சொன்னார்க் கடிகடா மருளுமாறே. எனவும்

திருமந்திரத் திருமுறையிலே,

அன்புட னேநின் றமுதமு மேற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதொறும்
துன்ப மகற்றித் தொழுவோர் நினையுங்கால்
இன்ப முடனேவந் தெய்திடு முத்தியே. எனவும்

கூறப்பட்டுள்ளது காண்க.

வெண்மைநிறமுள்ள கர்ப்பூரம் அக்கினிபற்றியவிடத்தே அதன் வடிவம் ஓர் பற்றுமில்லாமல் முற்றுங் கரையப்பெற்று, ஆகாயத்துடன் கலந்து அத்துவிதமாய் விளங்கல்போல ஆன்மா வெண்மைநிறமான சாத்துவித குணத்தைப் பொருந்தி, ஞானக்கினி பற்றியவிடத்தே பசுத்தன்மை நீங்கிச் சிவமாந்தன்மை விளங்கப்பெற்ற, சரீரங்கரையப்பெற்று, சிவபெருமானோடு கலந்து அத்துவிதமாய்ப் பேரானந்தப் பெருவாழ்வு அடைதல்வேண்டுமென்னுங் குறிப்பை உணர்த்துவதற்காகக் கர்ப்பூர ஆராதனை செய்வதாம்.

பட்டணத்துப் பிள்ளையார்.

அக்கினி கர்ப்பூரத்தை அறவிழுங்கிக் கொண்டாற்போன்
மக்கினம் பட்டுள்ளே மருவியிருந் தாண்டி.

தாயுமானசுவாமிகள்.

தீதணையாக் கர்ப்பூர தீபமென நான்கண்ட
சோதியுட னென்றித் துரிசறுப்ப தென்னளோ.

இப்படி நமது ஆகமங்களும் சிவாநுபூதிச் செல்வர்களும் சொல்லுகையினலே கிரியைகளெல்லாம் ஞானத்துக்கு அறிகுறியென்பது அறியப்படும். இன்னும், உமாபதிசிவாசாரிய சுவாமிகள் :—

"மற்றதின் மங்கல மாலைக டோரணம் வாழ்தீபம்
பொற்றவி செண்பல கைக்குல நெய்பொரி பொற்பூநூல்
சுற்றிய கும்ப முடன்கல சம்பல சூழ்வித்தே
யற்றிகழ் வொன்று சடங்குதி வாச மமைத்தார்கள்."

என அருளிச்செய்திருக்கின்றார். இச்செய்யுளுக்குப் பொருள் எளிதிற்புலப்படும் பொருட்டு அதற்கு ஆறுமுகநாவலர் செய்தஉரையுங் காட்டுவாம். அஃதாவது:—

அம்மண்டபத்திலே மங்கலமாகிய திருமாலைகளும், தோரணங்களும், தூண்டா விளக்குகளும், கனகசிங்காசனமும், அட்டமங்கலம் வகுத்தபலகையின் கூட்டமும், நெய்யும், பொரியும், தருப்பை அறுகு முதலிய புற்களும், புட்பமும், நூல்சுற்றிய கும்பத்தோடு பலகலசங்களும் அமைத்து ஓர் இராத்திரிமுழுதும் அதிவாசகிருத்தியத்தைச் செய்தார்கள் என்பதாம். இங்ஙனம் இக்கிருத்தியங்களைச் செய்தவர் யாவரெனில் பதஞ்சலியும், உபமன்யுவும், வசிட்டரும், தில்லைமூவாயிரவரும் பிறருமாம். இங்கே அட்டமங்கலம், நெய், பொரி, தருப்பை, புஷ்பம், நூல்சுற்றிய கும்பம் முதலிய யாக உபகரணங்களும் அதிவாசக்கிரியையும் சொல்லப்பட்டவாறு காண்க.

மேலும் பெரியபுராணத்திலே பிரமபுரத்து அந்தணர் ஸ்ரீ ஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொண்ட சிறப்புக் கூறுமிடத்து,

ஆரணங்கள் மதுரவொலி யெழுந்து பொங்க
வரசிலையுந் தருப்பையும்பெய் தணிந்த வாசப்
பூரணகும் பங்கணிறை கரக மேந்திப்
புதுமலரு நறுந்துகளும் பொரியுந் தூவி
வாரணங்கு முலையுமையாள் குழைத்த செம்பொன்
வள்ளத்தி லமுதுண்ட வள்ள லாரைச்
சீரணங்கு மணிமுத்தின் சிவிகை மீது
செழுந்தரளக் குடைநிழற்கீழ்ச் சென்று கண்டார்.

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே வடமொழிமறைகளின் இனிய ஒலி எழுந்து பெருக அரசிலையுந் தருப்பையுமிட்டு அலங்கரித்த வாசனையுடைய பூரணகும்பங்களையும் நிறைந்த கரகங்களையுந் தாங்கி, மலர்களையும் சுண்ணத்தையும் பொரியையுந் தூவி வள்ளலாராகிய பிள்ளையாரைக் கண்டார்கள் என்று அருண்மொழித்தேவர் திருவாய்மலர்ந்தருளுவது காண்க.

பண்டாரசாத்திரம் உற்சவவிளக்கத்தில்,

யாகமண் டபத்தி லெய்தி யெழிறரு குண்டஞ் செய்திட்
டாகவே திகையின் மீதே யைவகை கலை நிறுத்தி
யோகமா யாதி யாய வொன்பது கும்ப மர்ச்சித்
தேகமா மீசர் கண்ணே கும்பவத் தனையி ருத்தி.

என்பதாதியாக வருவதும் அறிக.

காணும்பொருளெல்லாம் சிவநிறைவாகவே கொள்ளும் தெய்வக்கவிநலம் சிறந்த சேக்கிழார்முனிவர் திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணத்தில் மதிலும் அகழியும் வருணிக்கும்பகுதியில்,

> கொந்தலர்பூங் குழலிமையக் கொம்பு கம்பர்
> கொள்ளும்பூ சனைகுறித்த தானங் காக்க
> மந்திரமா மதிலகழி யவர்தாந் தந்த
> வாய்மையா கமவிதியின் வகுப்புப் போலும்
> ..............................மலர்க் கிடங்கு மாதோ.

என்று அருளிச்செய்கின்றார்கள். அகழியானது பார்ப்பதிதேவியார் திருவே சம்பநாதர் விரும்பி ஏற்றுக்கொள்ளும் பூசைத்தானத்தைக் காப்பதற்காக, அவ்விறைவரால் அருளிச்செய்யப்பட்ட உண்மையாகமங்களின் விதிப்படி வகுக்கப்பட்டவையாகிய மந்திரத்தால் அமைத்த மதில்களுடன்கூடிய அகழியை ஒத்திருக்குமென்பது இதன்கருத்து. இங்கே கூறியது பூசைக்குரிய ஐவகைச்சுத்திகளுள் தானசுத்தியைக் குறித்ததாம். "ஐவகைச் சுத்திசெய் தாசனம் மூர்த்தி மூர்த்திமானும் சோதியையும் பாவித்து ஆவாகித்து" என்பது சித்தியார். இவையெல்லாம் சேக்கிழார்முனிவர் கூறியபடி பரமசிவன் தந்த ஆகமங்களைக்கொண்டே அறிந்து செய்யத்தக்கதாம்.

இனித் திருநாவுக்கரசுசுவாமிகள் தனிக்குறுந்தொகையில், இறைவனை "ஒன்பதோன் பதியான்" என்று கூறுகின்றார். இத்தேவாரப் பகுதி ஒன்பதொன்பதாகிய எண்பத்தொரு பதங்களிற் பேசப்படுபவன் என்றும் எண்பத்தொரு பதங்களையும் தன்னையடையும் வழியாகவுடையவன் என்றும் பொருள்தரும். இந்த எண்பத்தொருபதங்களும் வடமொழிச்சிவாகமங்களிற் சொல்லப்படுவனவேயாம். இன்னும் அப்பர்சுவாமிகள் "ஐயிரண்டும் ஆறொன்றும் ஆனார் போலும்" என்றருளினர். இது 16 கலைப் பிரசாதமந்திரத்தைக் குறிப்பிடுகின்றது. "நான்மூன்று மானார் போலும்" என்றும் திருவாய்மலர்ந்தருளினர். இது மூலமந்திரத்தோடு சங்கிதா மந்திரங்களையும் குறிக்கும். இன்னும் பலவுள. இந்த நுண்பொருளெல்லாம் ஆகமசாஸ்திரங்களாலே உணரத்தக்கனவாம். இங்ஙனமெல்லாம் நமது ஆசார்யமூர்த்திகள் ஆகமங்களிற் பேசப்படும் மந்திரங்களைத் தமது அருட்பாக்களிற் போற்றியிருப்பவும், "தேவாரப்பொருளை அறிவதற்கு வடமொழி ஆகமஞானம் வேண்டியதில்லை" "தமிழ்மக்களுக்கு ஆகமம் வேண்டாம்" என்று புதுக்கொள்கையாளர் பேசும் பேச்சுக்கள் பொருளற்றனவாம் என்று அறிஞரால் ஒதுக்கத்தக்கனவேயாம்.

## தீக்ஷை.

(கூ௪) இனித் தீக்ஷையானது சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாண தீக்ஷை, ஆசாரியாபிஷேகம் என நான்கு வகைப்படும். இவை கிரியாதீக்ஷை ஞானதீக்ஷை என இருபேதமாம். இதனைத் திருமூலதேவநாயனார்,

> சமய மலசுத்தி தன்செய லற்றிடும்
> அமையும் விசேடமு மானமந் திரசுத்தி
> சமைய நிர்வாணங் கலாசுத்தி யாகு
> மமைமன்னு ஞானமானர்க் கபிஷேக மாமே. என்று கூறுவர்.

உமாபதி சிவாசாரிய சுவாமிகள் பௌஷ்கர விருத்தியில் பிராமணர் முதலிய நான்கு வருணங்களும் அநுலோமர் முதலிய சாதிகளுமுள என அறிவுறுத்தி, பிராமணர் முதலிய வருணத்தாருள் இவரிவர் ஆசாரியராகலாம் என்றும், நால்வகை ஆச்சிரமத்தாருக்கும் ஆசாரியக்கிரமம் இதுவென்

றும் தீக்ஷைபெறுதற்கு யோக்கியர் இந்த இந்த வருணத்தார் என்றும் அருளி யிருக்கிறார். இதுமுதலிய விஷயங்களைச் சாதியும் சமயமுமென்ற கட்டுரை யிற் காண்க.

பிறிதொருவாற்றானும் அறியமுடியாத இத்தீக்ஷாவிதிகளும் பிறவுமெல் லாம் விஸ்தாரமாக விளக்கிச் சொல்லுவன சிவாகமங்களேயாம். இச்சிவாக மங்களை மூலமாகக்கொண்டே பதினெட்டுச் சிவாசாரியர்களும் பிறரும் பத் ததிகளைச் செய்து உபகரித்தருளினார்கள் என்றறிக. இவற்றைக்கொண்டே அபிஷிக்தர்களும் கிரியை செய்கிறார்கள்.

## விவேசனம்.

(௫௫) இனித் தமிழ்நாடெங்கும் சைவப்பயிரை வளர்த்தவராகிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் எழுதியவற்றையும் இங்கே எடுத்துக் காட்டுதல் ஆவசியகமாம். அவர் எழுதுவதாவது:-

எங்கள் சமய முதனூல்களாகிய சிவாகமங்கள் கிரியாகாண்டம் ஞான காண்டம் என இருபகுதியனவாம். அவற்றுட் பின்னைகாண்டத்தாற் பிர பாதிக்கப்படும் சிவஞானமே பரமமாகிய முத்திக்குநேரே காரணமாம். முன் னைய காண்டத்தாற் பிரபாதிக்கப்படும் கிரியைகள் அந்தச் சிவஞானத்தை யுதிப்பித்து, முத்தியைப் பயப்பித்தலால் பரம்பரைக் காரணமாம். அக்கிரி யைகள் எல்லாம் சிவஞானத்திற்கு அறிகுறிகளாம். அது பசுக்களாகிய எங் கள் யுத்தியினால் இடர்ப்பட்டு அமைக்கப்பட்டதன்று. சிருட்டிகாலத்திலே சைவாகமங்களில் அக்கிரியைகளை விதித்த அதிபரமாப்தராகிய சிவனே அக்கிரியைகளுள் இன்னது இன்னதற்கு அறிகுறி என அவ்வாகமங்களிலே தானே தெளிவுறத் திருவாய்மலர்ந்தருளியிருக்கின்றார். முத்திக்குநேரே சாதனமாகிய சிவஞானம் கைவரும் வரைக்கும் இக்கிரியைகளை யாவரும் தங்கள் தங்கள் பக்குவத்துக்கிசைய ஆசாரியர் உபதேசித்தபடி செய்தல் வேண்டும் எனவும், சிவஞானங் கைவந்தபின்னர், அவைகளைச்செய்யாதொ ழியினும் ஒழியலாம்; பரோபகாரத்தின்பொருட்டு அவைகளைச் செய்யினும் செய்யலாம் எனவும், அக்கடவுளே அருளிச்செய்திருக்கின்றார். இப்படியே பூர்வாபரவிரோத முதலிய தோஷங்கள் இன்றி விளங்கும் சிவப்பிரணீதமா கிய சைவாகமங்களைக் குருமுகமாக உணர்ந்து, அவைகளால் விதிக்கப்படும் சிவஞானசாதனமாகிய கிரியைகளை நாங்கள் செய்துவருகின்றோம். இவ் வுண்மையை நீ சிறிதாயினும் ஆராய்ந்தறியாமையாலும், நான் பிடித்ததே சாதிப்பன் என்னும் கருத்தினாலும், எங்களையும் எங்கள் சமயத்தையும் வேண்டியவாறே இந்நாள்காறும் இகழ்ந்தமைபோல இன்னும்அவ்விகழ்தலே தொழிலெனக்கொண்டு, உன் வாழ்நாளை வீணாகப் போக்காமல் மெய்யு ணர்வைப்பெற்று உய்குதி, உய்குதி.— சைவதூஷணபரிகாரம்.

(௫௬) மேற்காட்டிய அருள்நலங்கனிந்த பொன்மொழிகளைக்கொண்டு நோக்குமிடத்து, கிரியையை அநுட்டித்தவரே யோகஞானங்கட்கு உரியவர் என்பதும் ஆலய நித்தியபூசைகள், பிரதிஷ்டை, திருவிழா, தீக்ஷை முதலிய நைமித்தியங்கள் காமியகருமங்கள் எல்லாம் சிவாகமவிதிப்படியே சைவசம யிகளால் செய்யப்படவேண்டும் என்பதும் அந்நூல்களைத் தழுவியே சான் றோர்கள் நமக்குச் சைவக்கிரியைகளை அறிவுறுத்தியிருக்கிறார்கள் என்பதும்

அம்முதனூல்களும் அவற்றிலுள்ள மந்திரம் கிரியை பாவனை மூன்றும் சமக் குரியனவே என்று ஆணையிட்டருளினார்கள் என்பதும், ஆகவே அவற்றைத் தூற்றுதல் பெரும் பிழை என்பதும் பட்டப்பகல்போல் விளங்குகின்றன. "இனி ஏமாற்றமுடியாது" "நாமெல்லோம் மரக்கட்டைகளா?" "என்ன உரிமை இருக்கிறது?" என்பன போன்ற வெற்றாரவாரச் சொற்றொடுப்புக் களை விடுத்து, காரணகாரியமுறைப்படி தக்க ஆதாரங்களுடன் தம்கோளை நிலைநிறுத்துவது புதுக்கொள்கையாளர் கடமை.

**திருமந்திரம்.**

நவிற்றுநன் மந்திர நன்மலர் தூபங்
கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம்
பயிற்று மூலகிற் பராசத்தி பூசை
யவிக்கொண்ட சோதிக்கோ ரர்ச்சனை தானே.

கிரியை யோகங் கிளர்ஞான பூசை
அரிய சிவனுரு வமரு மருபந்
தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை
யுரியன நேயத் துயர்பூசை யாமே.

இனி, அன்பைப்பற்றிப் பலஇடங்களில் எடுத்துச்சொல்லுகிறார்கள் ஆராச்சிக்காரர். அன்பு இல்வழிச் சிவபெருமானை ஒருவாற்றானும் அடைதல் கூடாதென்பது நிச்சயமே. இவ்வன்பு பல பிறவிகளிலே சிவன் அருளிச் செய்ய வரும். சிவபுண்ணிய முதிர்ச்சியின்றேல், அன்பினகத்துட்கொண்டு, சிவத்தை நீடித்துப் பார்த்தல் கூடாது. சிவபுண்ணியமில்லாமையால் நீடித் துச் சிவத்தை நோக்க இயலாதநாம் பக்தியை அநுசரித்துக் கிரியையின்றி வாழுதல் முடியும்எனல் நாடகமாத்திரையேயாம். அங்ஙனமாயின் கண்ணப் நாயனாருக்குப் பக்தியுண்டானதற்குக் காரணம் என்னையெனில்; முற்பிறப்பி லே் வேதாகமங்களையோதியுணர்ந்து, சிவனை உபாசித்தமையேயாம். இவர் முற்பிறப்பிற் செய்த தவமே இப்பிறப்பில் அன்பிற்குக் காரணமாயிற்றுஎன அறிக. இது,

முன்புசெய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான
வன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
யென்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்.

என்ற சேக்கிழார்சுவாமிகள் வாக்கால் நிலைபெறும்.

## சாதிப்பிரிவு. (௧எ)

வீழ்க பொல்லா ஆரியர்கள் விதித்த சாதிப் பிரிவெலாம்.

என்பது பூருவ பக்கத்தார் பாடிய பாட்டுக்கள் ஒன்றின் ஒருபகுதி. அவர் னென்னுலென ஒத்துக்கொண்ட திருமந்திரத்திலே,

மறையவ ரர்ச்சனை வண்படி கந்தான்
இறையவ ரர்ச்சனை யேயபொன் னாகும்
குறைவிலா வயிசியர்க் குக்கோ மளமாந்
துறையுடை சூத்திரர் தொல்வாண லிங்கமே. என்றும்,

மந்திர மோரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையி னொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்களுய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலயராய் மாய்வர் மண்ணிலே. என்றும்,

திருத்தொண்டர் புராணத்தில்,

ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்விற் றம்மி
லுயர்ந்தனவு மிழிந்தனவு மான சாதி
தாங்குழுமிப் பிறந்தகுல பேத மெல்லாந்
தந்தகைமைக் கேற்றதனி யிடங்கண் மேவி
யாங்குநிறை கிளைபயின்று மரபி னுற்ற
வடுத்தவினைத் தொழின்முறைமை வழாமை நீடு
பாங்குவள ரிருக்கைநிலை பலவு மெல்லாம்
பண்புநீ டியவுரிமைப் பால வன்றே.

என்றும் வரும் வருணப்பிரிவை விளக்கும் செய்யுட்களை ஆரியர்விதித்தனர் என்பாரா? அன்றி வேறு காரணங்காட்டி மறுத்துப்பாடுவாரா? இவ்வாறு வரும் செய்யுட்கள் இன்னும் பல. விரிவஞ்சி எழுதப்படவில்லை.

"சாதி வேற்றுமையை வகுக்காத சைவமதம் யாண்டும் ஹரிசனங் கோயிலுட்புகுவதைப் பற்றியேனும் அதை விலக்குவதைப்பற்றியேனும் பேசிற்றிலது" எனத்தந்துணிபுரைத்தார் ஒருவர்.

சைவசமயத்தில் சாதிவேற்றுமையுண்டென்பது இங்கேஎடுத்துக்காட்டப்பட்ட திருமுறைப்பிரமாணங்களினுல் நாட்டப்பெற்றிருப்பது காண்க. ஆகவே சாதிகுலபேதங்கள் உள்பொருளேயன்றி இல்லாதவையல்ல;வினைப் பயன்கள் அனுபவத்துக்கு வருங்கால் சாதி ஆயு போகம் எனமூன்ருல்வரும் என்பது சித்தாந்த சாத்திரத்திற்கண்ட உண்மை. அதனைச் சாதியும் சமயமும் என்னும் நூலில் விளக்கினும். ஆண்டுக்கண்டுதெளிக. சாதியை வகுத்துக்கூறிய சைவசாத்திரங்களே அவ்வச்சாதியினர் நின்று வழிபடும் இடங்களையும் நிச்சயித்தன என்றுணர்க.

இன்னறரு மிழிபிறவி யிதுதடையென் றேதுயில்வார்;
அந்நிலைமை யம்பலத்து ளாடுவா ரறிந்தருளி.

எனவரும் பெரியபுராணமுங்காண்க. ஆகலின் அவர்கொண்ட புதுமுடிபுக்குச் சான்ருேர் நூல்களில் இடமில்லை என்பது தெளியப்படும்.

"சிவஞானபோதத்தில்............................................ .........
தீண்டாமைக்கு இடமுண்டோ" என்று கடாவுகின்ருர் புலவனுர் ஒருவர். அவர் பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்ருகிய ஆசாரக்கோவையைத் தமக்குரிய பிரமாணநூல்களுள் ஒன்ருகக்கொள்ளாது விடார் என்பது திண்ணம். ஆண்டுத்தானே,

தேவர் வழிபாடு தீக்கனு வாலாமை
உண்டது கான்றல் மயிர்களைத லூண்பொழுது
வைகு துயிலோ டிணைவிழைச்சுக் கீழ்மக்கள்
மெய்யுற லேனை மயலுற வீரைந்தும்
ஐயுரு தாடுக நீர்.

என்று சொல்லப்பட்டுள்ளது. கீழ்மக்களுடம்பு தீண்டியவிடத்து நீராடவேண்டும் என்று இப்பழந்தமிழ்ச் செய்யுளிற் கூறியிருப்பதே அவர் வினவிற்கு விடையாக அமைந்திருத்தல் நோக்கத்தக்கதாம். ஆகமங்களிலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளது. ஆகவே, பழந்தமிழ்ச்சைவர்கள் கைக்கொண்டொழுகியதும் வடமொழிச்சிவாகமங்களேயாம் என்பது இதனாலும் விளக்கமாம்.

## அந்தணர்.

(கூஅ) பண்டிதர் ஒருவர் திருமூலமாமுனிவர் அருளிச்செய்த திருப்பாடல்களை எடுத்துக்காட்டி "............பார்ப்பார்களைத் திருமூலர் இகழ்ந்துரைக்கின்றார்" என்று வரைந்திருக்கின்றார். அவற்றைஆராய்ந்து உண்மை உணர்த்துவாம்.

அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர்

என அப்பண்டிதர் எடுத்துக்கொண்ட திருமந்திரப் பாடற்பகுதியில், அந்தணர் என்பதற்கு அழகிய தன்மைபூண்டவர் என்றும், வேதாந்தத்தையே சிந்தைசெய்பவர் என்றும் இரண்டுபொருளும் கொள்ளத்தக்கதாக, அப்பகுதியைத் திருமூலநாயனார் அமைத்திருக்கிறார். அந்தணர் என்பதற்கு "வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார்" எனத் திருமுருகாற்றுப்படையில் நச்சினார்க்கினியாரும் பொருள்கூறுவர். 'அருமறை அந்தம்' எனத் திருமூலநாயனார் அருளியது, வடமொழி உபநிடதங்களையேயாம். 'திருநான் மறைமுடிவு' என்று ஔவையார் கூறியதும் இவற்றையே. இவை வடமொழியிலேயே உள்ளன என்று முன்னர் நிறுவப்பட்டது.

தம்முடைய கொள்கைக்குச் சாதகமாகாது பாதகமாகவே முற்றும் என்றெண்ணிப்போலும் அப்பண்டிதர் அம்மந்திரச்செய்யுள் முழுவதையும் குறித்திலர். ஆதலின் அச்செய்யுளை முழுதும் இங்கேஎடுத்துக்காட்டி விளக்குதல் ஆவசியகமாம்.

அந்தண்மை பூண்ட அருமறை அந்தந்துச்
சிந்தைசெ யந்தணர் சேரும் செழும்புவி
நந்துத லில்லை நரபதிநன் றாகும்
அந்தியுஞ் சந்தியு மாகுதி பண்ணுமே.

இப்பாட்டில் அந்தண்மைபூண்டு வேதாந்தத்தைச் சிந்தைசெய் அந்தணர் இருக்கும் பூமிக்கும் அரசனுக்கும் குறைவில்லை; நன்மையேயாகும் என்றருளியிருக்கின்றார். ஆதலின் இப்பாடல்களைக்கொண்டு, திருமூலநாயனார் அந்தணர்களை இழித்துக்கூறினார் என்பது விளக்கமின்மையால்வந்த பொருந்தாப்பேச்சேயாகும்.

பத்தியும் இன்றிப் பரன்உண்மை யின்றியூண்
பித்தேறும் மூடர் பிராமணர் தாமன்றே.

என்பதைக் காட்டினார். இக்கூற்று இருபிறப்பாளரில் வேதஉண்மை அறிந்த சத்தியமுள்ளவர்களையும் சிவபரத்துவமுணர்ந்தவர்களையும் தவிர்த்து அக்குணங்கள் இல்லாதவரையே தழுவிநின்றது. இதனாலன்றே,

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

என்றார் பொய்யாமொழியார். இச்செய்யுளை ஆராயப்புகுந்து ஓத்து-நூல் என்றும், பார்ப்பான் என்றது நூல்களைப்படிக்கிறவன் என்ற கருத்தைத் தருமேயன்றி, பிராமணர் என்ற கருத்தைத் தராது என்றும் ஆராய்ச்சிசெய்கிறார். நூல்களைப் பார்ப்பவன் என்றால் எந்த நூல்களைப்பார்ப்பவன் என்ற வினா எழும்.

நூல் என்பது பொதுச்சொல்லாதலின், ஒரு நூலைச்சொன்னால் அதுவுந்தான்; மற்றொருநூலைச் சொன்னால் அதுவுந்தான். இப்படியே ஈறின்றிப் பெருகும். எல்லாநூல்களையும் எனின்; "கல்விகரையில" என்றபெரியோர் வாக்கினால் அதுவும் பொருந்துமாறில்லை.

"அருமறை அந்தத்துச் சிந்தைசெய் அந்தணர்" என்றபடி வேதத்தைப் பார்ப்பவன் அல்லது வேதாந்தத்தைப் பார்ப்பவன் என்றே பொருள்படும். "ஓத்து" என்பது வேதம் என்றே பொருள்படும். அதுவன்றி வேறுவிதமாகப் பொருள்படுமாறில்லை என்பது, விபுலானந்தசுவாமிகளை ஆசிரியராகக்கொண்டு வெளிவந்த விவேகானந்தனில் ஆசிரியர் கூற்றாக இக்குறட்பாவுக்கு எழுதிய விளக்கத்தை இங்கேதருதல் நலந்தரும். அஃதாவது:—

"ஓத்துஎன்பது நூல்என்றும் பார்ப்பான்என்பது நூல்களைப்பார்க்கின்றவன் என்றும் பொருள்கூறுகிறார். இவற்றிற்கு முறையே வேதம்என்றும் உயர்குலத்தினைஞ்கிய அந்தணன்என்றும் கொள்ளாக்கால் பொருட்பொருத்தம்இன்றாம். நூல்களைப் பார்க்கின்றானுக்குப் பிறப்பு ஒன்று உண்டோ இன்றோ எனக்கடாயினார்க்கு உண்டேயெனல் வேண்டும். அப்பிறப்பும் உயர்குலப் பிறப்போ இழிகுலப் பிறப்போ எனின்; கெடும் என்ற வினைஆற்றலால் உயர்ந்த பிறப்பினையே ஈண்டுக் கூறியதாகப் பெறப்படும். பிறப்புடையானது நூலும் "அந்தணரருமறை" என்று கூறப்படும் வேதம்அன்றி வேறன்றாம். பிறநூல்கள், மறக்கற்பாலன அல்ல என்னுங் குறிப்படங்கிய உம்மைகொடுத்துக் கூறத்தகும் சிறப்புடையன அல்ல; ஆகலின் இக்குறட்பாவுக்குப் பரிமேலழகர் கூறிய பொருளே பொருத்தமானபொருள் என்க" என்பதாம்.

பார்ப்பான் பிறப்பு அந்தணனது உயர்ந்தவருணம்என்பர் பரிமேலழகர். பார்ப்பான் பிறப்பு என்றமையால் பிறப்பினால் பார்ப்பான் என்றவனையே இக்குறள் குறித்தது என்பது பெறப்படும்.

> பார்ப்பார் அரசர் வணிகர்வே ளாளரெனப்
> பாற்படு நாற்பெயர் குலப்பெய ராகும்.

என்ற பன்னிருபாட்டியற் சூத்திரம் பார்ப்பார் என்றசொல் முதற்குலத்தவர்க்குரியதென விளக்குகின்றது. பார்ப்பனகுலம் உயர்ந்ததேயாம் என்பது

> "ஓதலுந் தூது முயர்ந்ததோர் மேன"

என்று ஆசிரியர் தொல்காப்பியர் அவரை உயர்ந்தோர்என்றமையாற் பெறப்படும். நான்மணிக்கடிகை நூலாசிரியரும் "அந்தணரி னல்ல பிறப்பில்லை" என்றார். அப்பிறப்பு எய்துவதும் பூர்வஜன்ம கன்ம விசேடத்தினாலேயே என்பது ஞானநூல்களின் முடிபுகளில் ஒன்று. இனி ஓத்து எனப்படும் வேதம் பார்ப்பாருக்கு உரிமையாதலினன்றே திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரம் கொடுத்தாருள்ஒருவர் 'செய்யா அதற்குரியர் அந்தணர்' என்றார். செய்யாஅது என்றது வேதத்தை. "நான்மறைக் குலத்தந்தணர் நவையறுகாட்சி

யூன்மறைத்திடு மூயிரென வோம்பிய ஒழுக்கார்'' என்றருளினர் கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள். மேலாராய்ச்சியினுல், "மறப்பினும் ஒத்துக் கொளலா கும்........" என்ற உத்தரவேதத்துக்கு முன்னோர் கண்ட உரையே பொருத்தமானதென்பது நிச்சயிக்கப்படும்.

ஆதலினுலே திருமூலநாயனுர் பார்ப்பனர் எல்லாரையுமே, இழிவுபடுத்திப் பேசினுரல்லர்; ஒழுக்கந்தவறியவர்களையே அங்ஙனம் இழித்துக் கூறியருளினுர் என்றுணர்க.

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றன்னை யர்ச்சித்தால்"

என்பது சிவதீக்ஷை அபிஷேகம் இல்லாதவர் பரார்த்தசிவலிங்கபூசை செய்தலாகாது என்பதைச் சுட்டுகின்றது.

"மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வும்"

என்ற திருமந்திரத்தை எடுத்துக்காட்டினுர். "சீலாங்கவேதத்தைச் செப்ப வந்தேனே" என்றபடி முதனூற்பொருளைத் தமிழிற்கூறவந்த திருமூலர் வேதத்திலும் ஆகமத்திலும் அந்தணர்க்குரித்தெனச்சொல்லப்பட்ட நூல் சிகை முதலியவற்றை யிழித்துக் கூறினுரெனல் பொருந்தாக் கூற்றேயாம். திருமூலதேவர் அந்தணரொழுக்கம் என்னும் பகுதியில்,

நூலும் சிகையு நுவலிற் பிரமமோ
நூலது கார்பாச நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம்
நூலுடை யந்தணர் காணு நுவலிலே.

என்றருளிச்செய்தார். நூலும் சிகையும் அந்தணர்க்கு உரியனவாதலினன்றோ, அவற்றைச் சிறப்பித்து மேற்கண்டவாறு அருளினர் என்க. அந்தணர் உபநயனம் பெற்றவுடன் அனுட்டிக்கற்பாலனவாய வேதமோதல்,திரிகால சந்தியாவந்தனம், காயத்திரிஜபம் முதலியனவாய் ஆரிய வேதத்துட் சொல்லிய கருமங்களை அந்தணர்க்குரியவை என்று குறிப்பிடுதல்மூலமாக, அந்நெறியில் நிற்போராகிய வேதியரையும் "துகளில் பார்ப்பார்" என்றருளினுர் திருமூலர் ஆதலின், பார்ப்பனர் எல்லாரையுமே திருமூலர் இகழ்ந்தார் என்றலும் அவர்க்குரிய வேடத்தை இகழ்ந்தார் என்றலும் பொருளற்ற மொழிகளாம்.

1. அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுள்ளோர்
செந்தழ லோம்பிமுப் போது நியமஞ்செய்
தந்தவநற் கருமத்து நின்றாங் கிட்டுச்
சந்தியு மோதிச் சடங்கறுப் பார்களே.

2. பெருநெறி யான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான திருகை யிருத்திச்
சொரூபம தானோர் துகளில்பார்ப் பாரே.

3. காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவப்பாமந் திரமாங் குன்னி
நேயத்தே ரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துட் டோயா மறையோர்க டாமே.

காயத்திரி மந்திரப்பெருமையை உகூ-வது பகுதியிற்கூறினும். ஆண்டுக்காண்க. "அந்தணராவோர் அறுதொழில் பூண்டுள்ளோர்" அந்தணருக்கு அறு தொழிலுண்டு என்பது திருமூலருக்கும் கருத்தாதல் தெளிவாம்.

## சைவசமயநெறி சிவநெறிப்பிரகாசம்.

(ருக) திருவாசகத்திருமுறையிலே ஆகமங்களை இறைவன் ஐம்முகத்தாற் பணித்தருளியதாக விளக்குவதும் சைவாகமங்களிலே பேசப்பட்ட ஆகமோற்பத்திக்கு ஒத்ததாகவே இருக்கின்றது. சைவசமயநெறியில் ருஉஅ-வது திருக்குறள் முதல் ருருரு-வது வரை) வேதசிவாகமங்கள் சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களினின்றும் தோற்றியனவாகவே சொல்லப்பட்டுள்ளது. அதற்கு நாவலர் எழுதிய விரிவுரையுங் நோக்குக.

சிவாக்கிரயோகிகள் அருளிச்செய்த சிவநெறிப்பிரகாசம் என்னும் நூலில் நான்கு வேதமும் இருபத்தெட்டாகமங்களும், எல்லையற்ற அறிவும் தொழிலும் அனுக்கிரகமும் உடையவராகிய சிவபெருமானுடைய வாக்கென்றே சொல்லப்பட்டுள்ளது.

..........................................................................
போற்றியிடு மாகமத்தி னிலக்கணந்தான் புகலில்
எல்லையிலா வறிவுதொழி லனுக்கிரக ஞகி
யெவ்வுயிர்க்கு முயிராகி யிச்சைவெறுப் பின்றி
அல்லினுடன் பகலுமிலா அரனருள்வாக் கியங்கள்
அவை யறியில் வேதசிவா கமங்களே என்னும்,

குமாரர்துதியில் "வேத சிவாகம மாதியான—மெய்ந்நூல்களனைத் தினையும் விரித்து நன்று, ஓதியிட அகத்தியரை முதலாவுள்ள வுயர்முனிவோர்க் கருள்புரிந்த வொருமை யாளன்"

என வேதசிவாகமம் என்னும் இரு பெருநூல்களையும் அகத்தியமுனிவருக்கு உபதேசித்தவர் முருகக்கடவுள் என்றுங் கூறினர். இங்கே வேதங்களும் ஆகமங்களும் எனச் சொல்லியவை எவை என ஆராயின், இருக்கு முதலிய நான்கு வேதங்களும் காமிகம் முதல் வாதுளமிறுதியான இருபத்தெட்டாகமங்களுமே என்பது தேற்றமாம். சிவாக்கிரயோகிகள் தாம்செய்த சந்நியாச பத்ததியிலும் சித்தியார்உரையிலும் காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் முதலாகிய மூலாகமம் இருபத்தெட்டையும், இருக்குமுதலிய நான்குவேதங்களையும் கருணாநிதியாகிய பரமசிவன்வாக்கென்றே விரித்துச் சொல்லுகையினுலே, அவர் சுட்டிய வேத ஆகமங்கள் ஆரியத்தில் உள்ளனவேயாம். சிவாக்கிரயோகிகள் நூல்களில் பரக்கக்காணலாம்.

## உமாபதிசிவம்—சிவப்பிரகாசம்.

(சு0) இனி, உமாபதிசிவாசாரியசுவாமிகள் "அளவில் பலகலை யங்க மாரணங்க ளுணர்ந்த அகத்தியனுக் கோத்துரைக்கு மண்ணல்" என சிவப் பிரகாசம்என்னும் சித்தாந்த சாஸ்திரத்திலே முருகக்கடவுளைத் தோத்திரிப்பர் "ஒத்து" என்றது இருக்காதி நான்கு வேதங்களையும் அங்கம் என்றது, சிக்ஷைமுதலிய வேதாங்கங்கள் ஆறனையுமாம். அச்சிவாசாரியசுவாமிகள் பௌஷ்கரவிருத்திக்குச் செய்தருளிய உரைப்பகுதிகளால் இவ்வுண்மை நிச்சயிக்கப்படும். இவ்வாற்றால் உமாபதிசிவாசாரியசுவாமிகளும் சிவாக்கிரயோ

கிகளும் அருளிய வாக்குக்களைக்கொண்டு ஆராயமிடத்து, அகத்தியமஹாமுனிவர் போற்றிய மறைகளும் ஆகமங்களும் வடமொழியேயாம் என்று பெறப்பட்டவாறு காண்க. ஆகவே, "மறைமொழிகளடங்கிய மறை என்னும் நூல்வகை தொல்காப்பியனார்காலத்துக்கு முன்னமே தென்னாட்டில் வழங்கியுள்ளதென அறிகிறோம். அவைகளே தமிழ்நான்மறைகளெனப் போற்றற்குரியன" என்றகூற்று, வைதிக சைவோத்தமரால் பூஷிக்கப்படுவதொன்றன்று என்பது ஒருதலை.

## திருமந்திரம்—ஆகமத்தோற்றம்.

(சுக) தொல்காப்பிய முனிவருக்கு ஆசிரியராகிய அகத்தியமுனிவர் காலத்தவராகிய திருமூலயோகிகள் திருமந்திரத்திருமுறையிலே,

அஞ்சன மேனி யரிவையோர் பாகத்தன்
அஞ்சோ டிருபத்து மூன்றுள வாகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே.

எனத் திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார். இதன் பொருள்:—உமையொருபாகனாகிய பரமசிவன் மேற்கண்ணதாகிய ஈசானமுகத்திலிருந்து, இருபத்தெட்டாகமங்களையும் அறுபத்தறுவர் கேட்கத் திருவாய்மலர்ந்தருளினன் என்பதாம். இங்ஙனம் அறுபத்தறுவரும் உபதேசம்பெற்றகிரமம், உமாபதிசிவாசாரியரால் அருநூல்என்று போற்றப்பட்ட காமிகாகமத்திலே சொல்லியபடி இங்கே காட்டுவாம்.

காமிகம்முதல் வாதுளமிறுதியான இருபத்தெட்டு ஆகமங்களுள்ளும், காமிகம்முதலிய பத்து ஆகமங்களையும் விஞ்ஞானகலருள் பிரணவர்முதலிய பத்துச் சிவன்களுக்கும் உபதேசித்தருளினார். இக்காரணம்பற்றி இவை சிவபேதம் எனப்பட்டன. சிவபேதம் பத்தையும் கேட்டவர் ஒருவரிடத்தொருவராக ஒவ்வோராகமத்துக்கும் மும்மூன்றுபேராய்ப் பிரணவர்முதல் முப்பதின்மராவர். காமிகம் கேட்டவர் பிரணவர்—திரிகலர்—ஹரர் என்பவர். இதுபோன்று ஏனைய ஆகமங்கட்குமாம்.

இருபத்தெட்டாகமங்களுள்ளும் விஜயம்முதலிய பதினெட்டு ஆகமங்களும் ஈசுரதத்துவத்தில் இருக்கும் அநாதிருத்திரர்முதற் பதினெட்டுப்பேரையும் அறிஞராக்கி, அச்சதாசிவமூர்த்தியால் உபதேசிக்கப்பட்டன. ஆகையால் அவை உருத்திரபேதம் எனப்பட்டன. உருத்திரபேதம் பதினெட்டும் கேட்டவர் ஒருவரிடத்தொருவராக ஒவ்வோராகமத்துக்கும் இவ்விரண்டுபேராய் முப்பத்தறுவராவர். விஜயாகமம் கேட்டவர் அநாதிருத்திரர்—பரமேசர் என்பவர். இவ்வாறு ஏனைய ஆகமங்கட்குமாம்.

இங்கே கூறியவாற்றானே, சிவபேதமாகிய பத்து ஆகமங்களையும் கேட்டோர் முப்பதின்மரென்றும், உருத்திரபேதம் பதினெட்டும் கேட்டோர் முப்பத்தறுவர் என்றும் அறிந்துகொள்ளற்பாலதாம். ஈண்டுக்காட்டியமுப்பதின்மரையும் முப்பத்தறுவரையுமே திருமூலநாயனார் அறுபத்தறுவர் எனக்குறிப்பிட்டருளினார் என்றும், அவர் அங்ஙனம் அருளியது சிவாகமவழிபற்றியே என்றும் உளங்கொளற்பாலதாம். இதுபற்றியே சைவசமயநெறியும்,

அறுபத் தறுவர் பிரணவ ராதி
அறிவுறக் கேட்டா ராகமம்—என்று கூறிற்று.

இதற்கு ஆறுமுகநாவலர்எழுதிய விருத்தியுரையும்காண்க. "சதாசிவப்பிரமத்தினுடைய தற்புருஷமுகத்தினின்று இருக்குவேதமும், அகோரமுகத்தினின்று யசுர்வேதமும், வாமதேவமுகத்தினின்று சாமவேதமும், சத்தியோசாதமுகத்தினின்று அதர்வவேதமும் ஈசானமுகத்தினின்று ஆகமங்களும் தோற்றியன என்று அகஸ்தியசங்கிதை செப்புதலால் புராணங்களும் திருமூலர் முதலியோருடையகருத்தையே தழுவிச்செல்லுகின்றன என்பது துணிபாம்.

## சிவாகம தூஷணம்.

வேதசிவாகமத்தோற்றம்பற்றி மேற்கண்டவாறு திருமூலமுனிவர் அருணந்திசிவாசாரியர் உமாபதிசிவாசாரியர் முதலிய சிவாநுபூதிமான்கள் அருளிய மெய்யுரைகளை அங்கீகரியாது, தம் கொள்கையைச் சாதிக்கவேண்டிச் சான்றோர் செய்யுட்களுக்குத் திரிபுப்பொருள்கொண்டும் பூர்வாபரவிரோதமுற எழுதியும் வேறு பொருள்குறித்த வாக்கியங்களைத் தாம் எடுத்துக்கொண்ட பிறிதொரு பொருளுக்கேற்றியும் இவ்வாறு பல உபாயங்களினாலே, "வேதங்களையும் சிவாகமங்களையும் அறியாமையும் தன்னலமும் நிரம்பிய புல்லியமக்களால் எழுதப்பட்ட நூல்கள்" என்று வரைந்துகொண்டமை சிவனடியார் தூஷணமும் சிவாகமதூஷணமுமாகிய சிவாபராதங்களாம்.

"ஒப்பிலி யநாதி முத்த னோதிய வேத மாதிக்
கொப்புயர் வுரைப்பார் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்
வெப்பெரி நிரயந் தன்னுள் வீழ்ந்துவெந் துருகி வீயார்
எப்பொழு தேறுவாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே."

என்னுந் திருவிருத்தத்தை நன்கிதினுணர்ந்து, சிவநெறிச்செல்வர்கள் காட்டிய வழியில் நின்று உய்திபெறக்கடவர்.

## உயிர்கள் கதி அடைதல்.

(சஉ) வேதாகமங்களாகிய முதனூல்கள் சிருட்டி ஆரம்பகாலத்தில் சிவபெருமானால் திருவாய்மலர்ந்தருளப்படாவாயின், அவை முதனூல்களெனப்படா. என்னையெனில், "வினையி னீங்கி விளங்கிய அறிவின் - முனைவன் கண்டது முதனூலாகும்" எனக் கூறப்படுதலினால் என்க. அதுவுமன்றிக் கதியடைபவருமின்றாய், அதனால் இறைமைக்குணம் இலன் எனப்படுவன் பரமசிவன். ஆகலான், சிருட்டி ஆரம்பகாலத்து, அவ்விறைமைக்குணம் வழுவாது, உயிர்கள் கதி அடையும்படி வேதாகமங்களை அருளிச்செய்தனன் என்னுங் கருத்துப்பற்றியே

ஆரண மாக மங்க ளருளினா லுருவு கொண்டு
காரண னருளா னாகிற் கதிப்பவ ரில்லை யாரும்
நாரணன் முதலா வுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்
சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றி டாவே.

எனச் சகலாகமபண்டிதர் கூறியதும் என்க.

இதற்கு வாதுளாகமத்தும் கிரணாகமத்தும் காண்க என்றார் ஞானப்பிரகாசதேசிகர். இக்கருத்தை "மாலய னிந்திரன் முதற் றேவர்க் கெல்லாங் குரவா வென்னும்" என்ற திருவிசைப்பாவும் குறிப்பிடுகின்றது.

ஆதலால் இப்பொழுதுள்ள வடமொழி வேதாகமங்களே இறைவன் சிருட்டி ஆரம்பகாலத்தில் அருளிச்செய்த முதனூல்கள் என்றும், தமிழில் இறைவன் முதனூல் செய்திலன் என்றும், அதனால் "அவை தமிழிலிருந்து மறைந்துபோயதெ"ன்றது நவீனருடைய படைத்துரை என்றும் தேறி, அவர்களை வேதாகம விரோதிகள் என்று கொண்டு, அவர்களது அசைவக் கொள்கைக்கு உடன்பாடாகாது வேதாகமவழியொழுகி விமலன் அருள் பெறுவீராக.

## அப்பயதீட்சிதர்—அரதத்தாசாரியர்.

(சரு) இனி, நூற்றுநான்கு கிரந்தங்கள்செய்து உபகரித்தருளிய அப்பயதீக்ஷிதயோகிகள் "சிவாகமங்கள் பிரமாணம் அன்றென்றுகூறும் மூர்க்கருடைய பிதற்றுரைகள் பிடர்பிடித்துந்தப்பட்டன" என்று கூறுகின்றார்.

உமாபதி சிவாசாரியசுவாமிகளால் பிரமாணிகராகக் கொள்ளப்பட்ட அரதத்தாசாரியர் "வேதத்தைப் பிரமாணமாகக் கூறுகின்ற சனங்களே உம்முடைய திவ்யாகமங்களையும் பிரமாணமென்று அறிகின்றார்கள். எதனாலெனில்; உமது தியானத்தைக்கூறியது வேதம். அதனைச் செய்வதற்கு வேண்டற்பாலதாகிய சொரூபலக்ஷணத்தை ஆகமம் கூறுதலால்" என்று உரைத்தருளினர்.

## நொடித்தான் மலைப்பதிகம்—ஞானஉலா.

(சகூ) சுந்தரமூர்த்திநாயனார் கைலைக்கு எழுந்தருளியபோது வழியிடைத் தாம் அருளிச்செய்த நொடித்தான்மலைத் திருப்பதிகத்தைத் திருவஞ்சைக்களத்தப்பர்சந்நிதி வாயிலாக உலகிற்கு அறிவுறுத்துமாறு ஆழிநீராசனாகிய வருணனிடம் கொடுத்தனர் என்பதும், சேரமான்பெருமாணாயனார் வழியிடை அருளிச்செய்த திருக்கைலாசஞான உலாவை அன்று வெள்ளியங்கிரியிற் கேட்ட மாசாத்தனார் அதனை மனதிற்கொண்டு திருப்பிடவூரில் வெளிப்படக்கூறியருளி உலகத்தில் நிலைபெறச்செய்தார் என்பதும் சேக்கிழார்வாக்கால் அறிகின்றோம். வழியிடை அருளிச்செய்த நொடித்தான் மலைப்பதிகமும் ஞானவுலாவும் புவியிடைப் பயன்படவேண்டி இங்ஙனம் இவர் வாயிலாகத் திருவஞ்சைக்களத்தும் திருப்பிடவூரிலும் அறிவுறுத்துவித்தருளிய இறைவன் ஆரணம் ஆகமங்கள் இல்லையேல் கதிப்பவர் இல்லையாகும். ஆதலால் தமிழில் இருந்து அக்காலத்தில் வழங்கிய வேதாகமங்களை அன்றுதொட்டின்றுவரை வெளிப்படுத்திப் பயன்படச்செய்து உயிர்களை இரட்சிக்காது வாளாஇருத்தல் அவன் கருணைக்கு இழுக்காகாதோஎனில், ஆகாது; எதனால் எனில், அவை தமிழில் இருந்து அழிந்துபோனலன்றோ அம்முதல்வன் அங்ஙனம்செய்வன். அவை தமிழில் இருந்ததும் அழிந்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் யாவும் எக்காலத்தும் இல்லாமையால் வெளிப்படுத்தினாரல்லர்.

## அப்பூதிஅடிகள்நாயனர்.

(சரு) "இடைக்காலத்தில் இருந்த அப்பூதிஅடிகள்போன்ற தமிழ்ப்பெருமக்கள் தமிழ்மாலைக் கைவிடவில்லை, சாதிவேற்றுமையைப் பாராட்டவில்லை" என்பது பூருவபக்கத்தார் கூற்று. இதனை ஆராய்வாம்.

"மைந்தரு மறையோர் தாமு மருங்கிருந் தமுது செய்ய............
அந்தமிழாளியாரிங் கமுதுசெய் தருளினாரே" என்பது சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கு"

"இவ்விடத்து அந்தணர் வேளாளர் முதலிய சாதிகுலங்களின் நிலை பற்றியும் உடனுண்டல் முதலிய சமூகஒழுக்க வழக்கநிலைபற்றியும் ஆராய்ச்சி செய்வார்பலர். இங்கு நிகழ்ந்தது சமய உயர்நிலைபற்றியது. சாதி குலம் சமூக ஒழுக்க வழக்கங்கள் வேறு; அவை ஒழுக்க உலகநிலைபெறக் கருதியனவாய், உடம்பைப்பற்றியன. முன்னையன உயிரினைப் பற்றியவை. அரசுகள் 'புதல்வர்களும் நீரும் இங்கு அமுதுசெய்வீர்' என்று ஏவியதனாலே அந்த ஏவல் செய்வாராய் மைந்தரும் அப்பூதியாரும் மருங்கிருந்து அமுது செய்தனர் என்றதனால், இது அந்நாளில் சமூக வழக்கன்று என்பது போதரும். சிவனன்பு பற்றிய உயிரின் உயர்ந்த சமயஒழுக்கந் தலைப்பட்டபோது ஏனைய உலகஒழுக்கங்கள் நிலைக்கமாட்டா. ஈண்டு அவற்றுக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை; அங்கினைவுகள் தானும் எழாது. உலகமுன்னைச் சார்புகள் மறக்கப்படும். அவ்வாறன்றி,உலகச்சூழலில் முழுதும் உழன்றுபடும் ஏனையோர் இந்நிகழ்ச்சிகள் பற்றி உலகமக்கட் கூட்டங்களின் நிலைபேறு பற்றிய சமூக ஒழுக்கங்களை நீத்துவிடுதல் செல்லாது. அரசகளும் அப்பூதியாரும் உடனிருந்துண்டமை பற்றி வேளாளராவார்எவரும் வேதியராவார் எவரும் உடனுண்ணுதற்குரியர் என்று முடித்தல் சாதிவேற்றுமையை ஒழிக்கஉதவாது உறுதிப்படுத்துவதற்கே துணைசெய்வதாம். நந்தனார்ஒருவர் அன்புநிலைபற்றித் திருஅருளின்படியே தீயின் மஞ்சனஞ் செய்து இறைவர்திருமுன்பு நேரே சென்றருளினர் என்றதனால் அவர் குலத்தவராவார் எவரும் எத்திறத்தினரேனும் குல ஒழுக்கங் கடந்து நேரே கோயிலினுள் திருமுன்பு புகுதற்குரியார் என்று கூறுவோரும் இவ்வாராய்ச்சியாளரும் ஒப்பர். இங்குச் "சிந்தைமிக்கு இல்லமாதர் திருவமு தெடுத்து நல்க" என்று மேற்கூறுதலானும், இஃது அந்நாள் வழக்கின்மையும், சிவனன்பு மீக்கூர்தலால் உலகிறந்த நிலையின் நிகழ்ந்தது என்பதும் புலப்படும்.

தாமும் அடியார்களும் அமுது செய்யும்போது அப்பூதியாரையும் மக்களையும் தம்முடன் இருந்து அமுது செய்யும்படி ஏவினர் திருநாவுக்கரசர்; அவர்களும் அவ்வாறே செய்தனர். இஃது சிவனன்பின் திறத்தால் உலகியலுணர்வு தூர்ந்து, சிவபோதம் வெளிப்படலால் நிகழ்ந்த செயல்; சாதிநிலை மரபுகள் சமயநிலைகள் வேறு; சமயங்கடந்த சிவபோதநிலை வேறு. இந்நிகழ்ச்சியினின்றும் சாதி நிலைமரபுகள் இல்லையென்றுவது அவைவேண்டப்படா என்றுவது கொள்ளும்முடிபுகள் போதரா. சாதி சமய மரபொழுக்கங்களை மனத்தினாலுங் கடத்தலாகாது என்பது தற்போதமுடையார்க்கு விதித்த இறைவன் கட்டளை. இதனை, ஸ்ரீமத் C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பெரியபுராணவிரிவுரையிற் கண்டு கொள்க.

## புற்றிடங்கொண்ட புராதனன்.

(சசு) "அப்பர்சுவாமிகள் பாடிய திருவாரூர்த் திருத்தாண்டகம் திருவாரூர்க்கோயில் வேதங்கள் முதலியன தோன்றுவதற்கு முன்னரே தோன்றியது என்பதைப் புலப்படுத்துகின்றது" என்றெழுதி "அறம்பலவுமுரைப்ப

தற்கு முன்னே பின்னே, ஒருவனுய் உலகேத்த நின்ற நாளோ, திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே என்று கூறியதும் காண்க" என்ருர் பண்டிதர் ஒருவர்.

திருவாரூர்த் திருத்தாண்டகத்தின் ஒவ்வோர்பகுதியை எடுத்து வரிசைப்படுத்தி ஒன்று சேர்த்துக் குறியீடுசெய்துகொண்டமுறை வாசிப்போரை மயங்கவைக்கலாம் என்ற கருத்துப்பற்றிப்போலும், இங்கே 'முன்னே பின்னே' என்றது திருவாரூர்த் திருத்தலத்தின்தொன்மையைக் காட்டுகின்றது. 'அறம்பலவுமுரைப்பதற்கு' என்ற பகுதி, வேதமுரைத்தவர் பரமகருணாநிதியாகிய பரமசிவன்என்ற உண்மையையேகுறிக்கின்றது. இப்பகுதிக்கு பூருவபக்ஷத்தாரும் "வேதங்கள் தோன்றுவதற்கு" என்றே பொருள்கொண்டனர். ஆகலின், வேதம் இறைவன் வாய்மொழியே என்பதை அவரும் ஒப்புக்கொண்டவராயினர். வேதத்தைஅறநூலென ஒப்புக்கொள்ளின், பலஇடங்களிலே அவற்றைப் புறக்கணித்துக் கூறவேண்டியஅவசியந்தான் என்னே? திருவாரூரில் புற்றை இடமாகக்கொண்டு வன்மீகநாதசுவாமி எழுந்தருளியிருப்பர். அது திருமூலட்டானம் எனப்படும். திருவாரூரில் இறைவன்புற்றை இடமாகக் கொண்டுள்ளவர் என்பது "புற்றிடங்கொண்ட புத்தேள்" எனக் கந்தபுராணத்தும், "புற்றிடங்கொண்டான்" என அப்பர்சுவாமிகள்தேவாரத்தும், "புற்றிடங்கொண்ட புராதனன்" எனத் திருத்தொண்டர் புராணத்தும் வருவனகொண்டு அறியலாகும். இறைவன்எவ்வியல்பினதாகிய புற்றை இடமாகக்கொண்டருளினன் என ஆராயின், உயிர்கள் தம்மை வழிபட்டு வாழ்வடையும் பொருட்டு வேதமேயுருவாகிய புற்றை இடமாகக்கொண்டருளினன் என்க. அது,

"வாழிய மாமறைப் புற்றிடங்கொண் மன்னவனூர்"

எனவரும் சேக்கிழார்சுவாமிகள்வாக்கினல் நிறுவப்படும். ஆகவே திருவாரூர் சிவாசனமும், மறைப்புற்று சிவமூர்த்தியும், அதில் எழுந்தருளியிருக்கும் சிவன் மூர்த்திமானுமாம் என்பது பெறப்படும். படவே, சிவாசனமாகியதிருவாரூர் பழமையானவாறுபோல, சிவமூர்த்தியாகிய மறைப்புற்றும் பழமையானதேயாம். இதனல் நான்மறைகளும் தொன்மையானவை என்று நிச்சயிக்கப்பட்டவாறு காண்க. புராதனனுகிய இறைவன்மொழியாதலின் வேதத்தின் பழமை நோக்கி அருண்மொழித்தேவர் "தொல்லை நான்மறை" என்றும், "ஆதிநான்மறை" என்றும், குமரகுருபரசுவாமிகள் "கடவுட் பழம்பாடற்றொடை" என்றும், "முதுமறை" என்றும் ஓதியருளினர்கள். ஆகவே அப்பண்டிதர் கூற்று வேதங்களின் பழமையை உறுதிப்படுத்துவதற்கே துணை செய்வதாயிற்று.

## எம்பிரானுடைய கோயில்புக்கு.

(சஎ) ஆராய்ச்சியாளர் சிலர் "நாவுக்கரசர்காலத்தில் யாவரும் கோயில் புக்கனர், "அப்பர்காலத்திலும் அதற்குமுன்னரும் கோயிலினுட் புகுந்த சைவர்களிற் சிலரை அவர்பின்வந்த ஆரியப்பிராமணரே தீண்டாதாராக்கினர்" என்றுகூறி "நிலைபெறுமாறெண்ணுதியேல் நெஞ்சே நீவா நித்தலுமெம்பிரானுடைய கோயில் புக்கு" என்ற தேவாரத்தைக்காட்டி "அப்பர் தம் நெஞ்சுக்கு உபதேசித்தது சைவர்கள் யாவருடைய நெஞ்சுக்கும் உரியதன்றே" என்று சித்தாந்தம் செய்கிருர்கள்.

இவர்கள் கண்டதுபோல் முன்ஒருவரும் கண்டிலர். அத்தேவாரத்தில் "கோயில்புக்கு" என்று உள்ளதேயன்றி கோயிலினுட்புக்கு என்று சொல்லப்படவில்லை, அத்தேவாரப்பகுதி ஒவ்வொருவருணத்தாரும் தத்தமக்குரிய இடங்களில் நின்று வணங்குதற்குரியர்; விதிக்கப்பட்ட இடம்வரையுமே நுழைதற்குரியர் என்னும் ஆகமவிதிக்கு மாறுபாடின்றியே அமைந்துள்ளது.

அப்பர்சுவாமிகள்காலத்தினர் திருஞானசம்பந்தப்பிள்ளையார்என்பதை மறுத்துரைப்போர் ஒருவரும் இல்லை. பரமசிவனுடைய திருவடிகளில் இடையறாத பத்தியுள்ளவரும் சிவபெருமானைக் குறித்து இசைபாடுபவரும் ஆகிய திருநீலகண்டப்பெரும்பாணனாரைத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமி திருக்கோயிலின் புறமுன்றில் நிறுத்தி இசைபாடச் செய்தனரன்றி, அப்பெரியார் திருக்கோயிலினுள்ளேசென்று இசைபாடச் செய்திலர். இவ்வுண்மை,

கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
தேயுமிசை யாழுங்க ளிறைவருக்கிங் கியற்றுமென
வாயபுகழ்ப் பிள்ளையா ரருள்பெற்ற வதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கியிசை விரிக்கின்றார்.

எனவரும் சேக்கிழார்சுவாமிகள் அருள்வாக்கினால் அறிந்துகொள்ளலாம்.

## கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்து.

(சஅ) திருக்கோயில் அமைப்பினில் இன்னின்ன மரபினர் இன்ன அளவுவரைபுகுதலும் நின்றுகும்பிடுதலும் சாலும் என்பதுபற்றித் திருக்கோயில் அமைப்பினைவிதித்த சிவாகமங்களுள் விதிக்கப்பட்டுள்ளன. சாதிகுலம் முதலிய சமூகமரபுபற்றிய நிலைகளும் அவ்வாறே. உடல்நினைவும் உலகநினைவும் தொடர்பும் உள்ளஅளவும் இவைபின்பற்றிக் காக்கத்தக்கன. அவற்றை விடுத்து முத்தியின் விருப்ப நிகழுநிலையில் அவைபற்றாது தாமாகவேகழன்று விடும். ஆளுடையபிள்ளையார் வேதநெறி சைவநெறியிரண்டினையும் காத்து வழிகாட்டியும் அளவுபடுத்தியும் உயிர்களை ஈடேற்றவந்த ஆசிரியராதலின், பாணரை அவர் மரபுபற்றிச் சிவாகமவிதிப்படி கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்கார். அதனால் அன்புநெறிக்கு இழுக்கின்மை அறிக. பிள்ளையாரே பின்னர் நல்லூர்ப் பெருமணத்தில் சாதிகுலமரபு பற்றாது புண்ணியமணத்தில் வந்தோர் எல்லாரும் பேதமின்றி முத்திநிலைபெறும்வாயில் வகுத்தருளி, "ஈனமாம் பிறவிதீர யாவரும் புகுக" என்று அருளியதும், அங்குக் குலநலம் பற்றாது "சீரார் திருமெய்ப் பெரும்பாணர் மற்றெனையோ ரணைந்துளோர்-பார்நிலவு கிளைசூழப் பன்னிகளோ டுடன்புக்கார்" என்றதுங் காண்க. ஆயின் ஈண்டே பிள்ளையார் அம்முறையயற்றி இருத்தல் ஆகாதோஎனின் ஆகாது; அவ்வவர்க்கேற்றபடி காலமும் இடமும் பக்குவமுநோக்கிப்பார்த்து அருள்புரிதல் கடவுள்நியதி. அதுவே ஆகமவிதியும் ஆசாரியர் ஒழுக்கமுமாமென்க. இதனைச் சிவக்கவிமணி சி. கெ. சுப்பிரமணியமுதலியார் எழுதிய வாற்றான் அறிக.

இங்கே காட்டியபடி, திருஞானசம்பந்தப் பிள்ளையாரது புராணத்தில் வரும் இந்நிகழ்ச்சியைக்கொண்டு ஆராயுமிடத்து, புதியஆராய்ச்சியாளர்கூற்று அர்த்தமற்ற பேச்சென்பது புலனாகின்றது.

## தேவார திருவாசகம் தமிழ்மறை.

(௪௧) சேக்கிழார்மூர்த்திகள் பெரியபுராணத்திருமுறையில் திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் புராணத்தில், "பாருளோர் சிந்தை—யிருளுநீங்கவு மெழுது சொன்மறை யளிப்பவர் தாம்" (செ. ௨௨௪) என்று கூறியருளுகின்றார். இன்னும் "தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார்" (௨௬0) என்றும், "விருப்புடன் பாட லிசைத்தார் வேதந் தமிழால் விரித்தார்" (௨௮௧) என்றும், "மன்னு தமிழ் மறையாம் பதிகம் பாடி" (௩௧௧) என்றும், ஓதினார் தமிழ்வேதத்தி னோங்கிசை" (௩௧௭) என்றும், "எழுது மாமறையாம் பதிகத் திசைமுழுதும் பாடி" (௩௧௮) மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார்" (௩௬௨) "எழுதுமா மறையாம் பதிகத் திசைபோற்றி" (௩௭௯) "அருந்தமிழ் மாமறை பாடி" (௬௨௨) என்றும் வரும் பகுதிகளால் தமிழ்வேதம், தமிழ் மறை, எழுதுமறை என்னும் பெயர்கள் தேவாரத்துக்கே பெயராயினமை புலப்படுகின்றது.

சிவக்கவிமணி C. K. சுப்பிரமணியமுதலியார் பெரியபுராணவிரிவுரையில் தமிழ்வேதம் பாடினார் (௨௬0) என்றவிடத்து, இறைவர் அருளியவேதத்தையே தமிழில் அருளியதென்பதாம். இறைவரருளிய வேதம் தமிழினன்றென்பது குறிப்பு என்றும், வேதந்தமிழால் விரித்தார் (௨௮௧) என்றவிடத்தில், ஆளுடையபிள்ளையாரும், ஆசிரியர் சேக்கிழார்பெருமானும் கண்டும் கொண்டும் கூறியவேதம் தமிழ்மொழியில் உள்ளதன்று என்பது பெறப்படும் என்றும், "எழுதுமா மறையாம் பதிகம்" (௩௧௮) என்றவிடத்தில் இறைவர் அருளியமறை எழுதாக்கிழவி எனப்படும். ஆனால் அதுவே பிள்ளையார் திருவாக்கிற் பதிகமாக வெளிப்படும்போது எழுதும் மறையாயிற்று. என்று எழுதிய குறிப்புகளும் கண்டுகொள்க.

தேவாரத்துக்குமுன் தமிழ்மறையென ஒன்றிருந்தால் அத்தமிழ்மறையின் பொருளையே தேவாரம் நிலைநிறுத்தியிருந்தால், முந்திய அத்தமிழ்மறையின் சிறப்பைச் சேக்கிழார்பெருமான் கூறாது விடுவாரா? இதனால் தேவாரப் பதிகங்கட்கு முன் தமிழில் நான்மறையென ஒன்றிருந்ததில்லை என்பதே துணிபாயிற்று. தமிழில் நான்மறைகள், ஆகமங்கள் இருந்தன என்பதையும், அது சம்பந்தமான விஷயங்களையும் காட்சி அனுமானம் உரை ஆகிய பிரமாணங்களைக் காட்டிச் சித்தாந்தம் செய்யாமல், ஆராய்ச்சியாளர் துணிகிறார்கள் என்னும் தமது சொந்தப்பிரமாணத்தையே எடுத்தாளுகின்றார். பூருவ பக்கத்தார் எழுதிய பதிலை நடுவுநிலைமையோடு வாசிப்பவருக்கு இது புலனாம்.

"நாளும்—ஞாலந்தான் பரவப்படுகின்ற நான்மறை அங்கமோதிய நாவன்" என்ற தேவாரத்தில் 'நாளும்—ஞாலந்தான் பரவப்படுகின்ற அடைமொழிச்சிறப்பினால் நான்மறையென்றது, தேவாரம் பாடியோர்காலத்தும் அதற்குமுன்னும் வழங்கப்பெற்றதும், அவர்கள் காலத்துக்குப்பின் இப்பொழுது வழங்கப்படுவதுமாகிய இருக்காதிவேதங்களையே குறிக்குமென்பது பொள்ளெனப் புலப்படுகின்றது. மாணிக்கவாசகசுவாமிகள் 'மிக்கவேத மெய்நூல் சொன்னவனே' என்றருளுகின்றார். இந்த வேத மெய்நூல் இவருடைய தமிழ்நான்மறையேயானால், அம்மறை அழியாதிருக்கவேண்டுமன்றோ! எதனால் எனில், கதியடைபவரும் குரு சந்தானமும் இல்லையாகிவிடு

மே! இன்னும் திருவாசகமும் வேதசாரமென்றுகொண்டு "சுருதிசெக் தமி ழாக்கிய மொழியார்" என்று திருவாதவூரர்புராணம்கூறும். ஆதலால் தேவா ரமும் திருவாசகமும் இறந்துபட்ட "தமிழ்மறையின் பொருளை வழிவழியே நிலைநிறுத்தி வந்த தமிழ்மறைகளாகும்" என்பது அசப்பியமேயாம்.

இங்ஙனமிருத்தலினால் நான்மறை என்பது வடமொழிவேதங்களே என்பதும், தமிழ்வேதமென்பது தேவாரதிருவாசகங்களேயாம் என்பதும் மறுக்கமுடியாத உண்மையாம்.

## கருவூர்த்தேவர்.

(௬0) திருவிசைப்பா ஆசிரியருள் ஒருவராகிய கருவூர்த்தேவரும், "ஆரணமொழிந்த பவளவாய் சுரந்த வமுதமூறிய தமிழ்மாலை" எனவும், ஆரணத் தேன்பருகி யருந்தமிழ் மாலை கமழவரும்" எனவும். "செழுமறை தெரியுந் திகழ்கரு வூரனேன்" எனவும் அருளும் திருவாக்குக்களினாலே, அவர் வேதம்பயின்ற மறையவர் என்று விளங்குவதோடு, அக்கருத்துக்க ளைத் தமிழில் இன்னிசை கமழப்பாடினார் என்றும் தெரியவருகின்றது. எப் போதும் வேதவசனங்களும் அவற்றின் கருத்துக்கள் அடங்கிய தமிழுமே இவர்வாக்கிற் கமழ்ந்து விளங்கின என்பதும் அறிக.

## திருப்புகழ்.

(௬௧) அருணகிரிநாதசுவாமிகள் "கான ஆகம வேத புராண நூல் பல வோதிய முருகோனே" என்று அருளுகின்றார். இங்ஙனம் வேதங்களும் உபநிடதங்களும் ஆகமங்களும் வடமொழியேயென்று கொண்ட அருணகிரி யார், திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவாக்கினை "ஆகம வேத புராண நூல்" என்றும், "சுருதித்தமிழ்க்கவி" என்றும், "ஆரணகீத கவிதை" என் றும், "உபநிடதமதுர கவிதை" என்றும் அவ்வேதோபநிடத ஆகமசாரமெ னப் பலபடப்பாராட்டுவது கண்டுகொள்க.

## வேதப்பொருளை நிச்சயித்தல்.

(௬௨) நீலகண்ட சிவாசாரியர் வியாசசூத்திர பாஷ்யத்திலே வேதசிவா கமங்களுக்குப் பேதமில்லை என்று கூறியிருக்கிறார். அதுவருமாறு:—

"யாமே வேதத்துக்கும் சிவாகமத்துக்கும் வேற்றுமை கண்டிலம்; சிவ னாற் செய்யப்படுதலின் வேதமும் சிவாகமம் என வழங்கப்படும். ஆதலாற் சிவாகமம் மூன்று வருணத்தார்க்கே உரித்தாயதும், நான்கு வருணத்தார்க் கே உரித்தாயதும் என இருவகைப்படும். அவற்றுள் முன்னையது வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட்டன, இவ்விரண்டுஞ் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம். பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக் கரம் முதலிய மந்திரங்களும் பதிபசுபாசமுதலிய பொருள் வழக்கமும், திரு நீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்திராக்கதாரணம் சிவலிங்கபூசை முதலிய பரதருமங்களும் பிறவும் வேதம் சிவாகமம் இரண்டிலும் ஒப்பக் காண்டலால் அவ்விரண்டும் பிரமாணமேயாகலானும், கருத்தா ஒருவனே யாகலான் அவ்விரண்டற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற்றுள்ளும் மாறுபாடின்மையானும்" என்று வேதம் சிவாகமம் இரண்டையும் நன்குணர்ந்த நீலகண்ட சிவாசாரியர் கூறியருளினார்.

## வெள்ளியம்பலவாணமுனிவர்.

(௫௬) மேலும், தருமையாதீனத்து வெள்ளியம்பலவாணமுனிவர் முத்தி நிச்சய உரையிலே,

"இன்னும் வேதாகமங்களின் முடிபொருள் ஒன்றென்பதை ஸ்ரீ மூல நாயனாரும், தாயுமானசுவாமிகளும் "நாடிலிரண் டந்தம்—பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே எனவும், வேதாகம சமரசநன்னிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே,எனவும் கூறியருளியதிருவாக்குக்களாற் கரதவாமலகம்போல் விளக்கிப்போந்தமையால் நன்கு அறியலாம்'என உரைத்தனர். வேதத்திலே சுருக்கியும் சூசித்தும் சொல்லப்பட்டவற்றை விரித்து விளக்கமுறச் சொல்லின ஆகமங்கள். ஆதலின் ஆகமத்தையின்றி வேதப்பொருளை நிச்சயித்தல் கூடாதென்பது பெறப்படும். வேதம் ஆகமம் இரண்டும் திரிபதார்த்த லக்ஷணங்களையே உணர்த்துவனவாயினும், அந்தவேதப்பொருள் ஆகமக்கண் கொண்டு பார்ப்பவருக்கே விளக்கமாகும். ஆகமத்தை அனுசரியாமையினாலன்றோ கபிலர் முதலிய இருடிகளும், வியாக்கியானங்கள் செய்த பிறரும் வேதத்துக்குத் தாம் தாம் நினைத்தபடி பொருள்கண்டு இடருற்றனர். வேதத்தைக்கற்ற அவ்விருடிகள் முதலியோரும் இடருற்றாரென்றால், அப்பிழையான வியாக்கியானங்களின் மொழிபெயர்ப்புக்களை அனுசரிக்கும் பூருவபக்கத்தாரையும் அம்மயக்கம் பற்றாது விடும் என்று சொல்லுவதெப்படி?

தூமறைக்கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெனப்படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப்பெருங் கடவுளு மயங்கினு னென்றால்
நாமினிச்சில வறிந்தன மென்பது நகையே.

இங்கேகூறிய பெருமக்களது மொழிகளை நாம் நோக்குமிடத்து வேசமானது சைவசமயத்துக்குப் புறம்பானதென்றும் ஆரியருக்கே உரியதென்றும் சொல்வதற்குச் சிறிதும் இடமில்லை.

சனகர் முதலிய நான்கு முனிவர்களும் வேதோபநிடதங்களை நெடுநாள்வரை ஓதியும் ஞானம் நிலைபெறாதவராயினர் என்றும், பின்பு ஆகமாந்தம் என்னும் பெயரையுடைய சித்தாந்தத்தையோதி ஞானம் நிலைபெற்றனர் என்றும் சங்கரசங்கிதையில் கூறியவாற்றாற்றெளியப்படும். படவே, சித்தாந்தம் வேதத்தின் தெளிவாயும் சாரமாயும் உள்ளதென்பதுபெறப்பட்டது. இவ்வுண்மை, "ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த - சாரங்கொண்ட சைவசித் தாந்தத் தேனமு தருந்தினர் சிலரே" எனவும், "வேதாந்தத்தெளிவாம் சைவசித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்" எனவம் வரும் திருவாக்குகளால் வலியுறுத்தப்படும். "இந்த ஆகமம் வேதசாரம் ஆதலின் வைதிகத்தை அனுசரிக்க" என மகுடாகமம் கூறும். "வேதப்பயனுஞ் சைவமும்போன் மண்ணின் பயனும்பதியின் வளத்தின் பெருமை வரம்புடைத்தோ" என்றார் அருண்மொழித்தேவரும். இவ்வாறு சிவஞானிகளாகிய பெரியோர்கள் கூறுவதை நோக்காது, 'வைதீகக்கொள்கைகள் மாய்ந்தொழியும்' என்றும், 'ஆரியமாசுபடிந்த வைதீகம்' என்றும், "ஆரியருடைய வேதநெறி" என்றும் கூறுவது, அச்சிவஞானச் செல்வர்கள் கூறிய அருண்மொழிகளை விளங்காமையான் வந்த பேச்சுக்களேயாம்.

## வேதம் இழிக்கற்பாலதல்ல.

(௫௪) வேதத்திலே இழிந்த ஒழுக்கங்களைப்பற்றிய செய்திகளும் அருவருக்கத்தக்க செய்திகளும் காணப்படுகின்றன என்பதாதியாகத் தீட்டுகிறார் பண்டிதர் ஒருவர். இதனாற் போந்தபயன் தமக்கென ஒன்றிலராகிய பேதைகளை மயக்கித் தம்மாட்டீர்த்துக் கொள்ளுதல் மாத்திரையேயன்றிப் பிறிதில்லை என்க. அவ்வேதப் பாடலுக்கெல்லாம் உண்மைக்கருத்துண்டென்பது அறிவாளர் யாவருக்கும் ஒப்பமுடிந்ததொன்று.

திருக்கோவையாரைப்பற்றிக்கூறிய பின்வரும் பாடலைக்கொண்டு, அவ்வவர் அறிவின் தரத்துக்கேற்பவே, அக்கோவையாருக்கும் பொருள்கொள்வரென்பது அவருக்கும் உடன்பாடாமென்றுகொள்ள இடமுண்டு. அப்பாடல் வருமாறு:—

ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலிதென்ப
ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே.

ஆதலின் வேதமந்திரங்கட்குத் தாங்கொண்ட இழிபொருளே பொருள் என்று நிச்சயிக்க அவரால் முடியாது. இயமன் யமி என்போருடைய கதையை எடுத்துக்காட்டினார். இவ்விருவருடைய கதையைஆராயின், சூரியனாற் பிறப்பிக்கப்பட்ட பகல் இரவு ஆகியஇரண்டனுள் இரவானதுபகலைச்சேரும் பொருட்டுக் காதலோடு பின்தொடரவும், பகலான்து சிறிதும் இடம்தராமல் ஓடிப்போகின்றது என்னும் உலகநிகழ்ச்சியைக் காட்டுமுகத்தால் உடன்பிறந்த ஆணும் பெண்ணும் மணஞ்செய்து கொள்ளக் கூடாது. அணுகிச்செல்லினும் பெரும்பாபம் என்றகருத்தைத் திருத்தமுறப் பெறவைத்துப் புனைந்துரை வகையால் எடுத்துக்கூறிய மந்திரமொழி வியக்கற்பாலதேயன்றி இழிக்கற்பாலதன்று. இவ்விதமே மற்றையவற்றுக்குமாம். இவ்வாறு நுண்ணிதாய் ஆராயவேண்டும். அவ்விதம் ஆராயாது அருவருப்பானபகுதிகளென்று வேதநிந்தனையில் இறங்கியிருப்பவர், கீழே காட்டப்படும் தத்துவப் பொருள் நிறைந்த திருமந்திரப்பாடல்களுக்கு எவ்வாறு பொருள்கூறுவரோ, அறியோம்.

### திருமந்திரம்.

1. பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதமை
பெண்ணிடை யாணும் பிறந்து கிடந்தது
பெண்ணிடை யாணெனப் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை யாணிடைப் பேச்சற்ற வாறே.

2. மங்கையு மாரனுந் தம்மொடு கூடிநின்
றங்குலி கூடி யகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல் லாளுங் குமரர்க ளைவருந்
தங்களின் மேவிச் சடங்குசெய் தாரே.

3. இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூட நினைந்து
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புணர்ந் தாளே.

கொழும்பு விவேகானந்தனில் "மறைமலையடிகளும் திருநான்மறையும்" என்ற கட்டுரைகாண்க.

## ஆகம விதிவழி ஆலயபூசை.

(௫௫) அநாதிமலமுத்தராகிய சிவபெருமான் அருளிய சிவாகமமானது, சரியை கிரியை யோகம் ஞானம் என நான்குபாதங்களையுடையன. அவை யொவ்வொன்றும் அநேக கோடி கிரந்தங்களாக விரிந்துள்ளன.

திருமந்திரம்.

"பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த வருளாற் றுரிசற்ற யோகத்தி
லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே"
"எண்ணி லெழுபது கோடிநூ றாயிரம்"

இவ்வுண்மையுணராது காமிகம் காரணம் முதலான ஆகமங்களில், யோக ஞான பாதங்கள் இல்லையென்று தொனிக்க எழுதியது பொருத்தமற்றதாம்.

சைவாலயங்களிலே நித்தியபூசை உற்சவம் பிரதிஷ்டைகளெல்லாம் சைவாகமவிதிப்படியே நடைபெறத்தக்கன. ஆசாரங்களும் தீக்ஷை முதலிய னவும் அவ்வாறே. இவைகளெல்லாம் வேறெந்த நூலிலும் விதிக்கப்பட்டில.

எண்ணி லாகம மியம்பிய விறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை யெனவுரைத் தருள
அண்ண லார்தமை யருச்சனை புரியவா தரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.

(திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணம்.)

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கு மாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான்
துங்க வாகமஞ் சொன்ன முறைமையால்.

(திருவாரூர்ச்சிறப்பு)

என்பது முதலியனவாகப் பெரியபுராணமானது, ஆன்மார்த்தபூசையும் ஆலயபரார்த்த பூசைமுதலியனவும் ஆகமஞ்சொன்ன முறைப்படியே செய்ய வேண்டுமென்று முழங்குகின்றது. அவ்வாகமங்களிலேயே, இன்ன இன்ன வருணத்தார் இன்ன இன்ன இடங்களில்நின்று ஆலயவழிபாடு செய்ய வேண்டுமென்றும், அவ்விதியைக்கடந்து நடத்தல் கூடாதென்றும் விதிக் கப்பட்டுள்ளது. அவ்வாகமப் பிரமாணங்களைக் கொண்டே ஸ்ரீ ல ஸ்ரீ நாவல ரும், பெரியபுராண சூசனம், நான்காம்பாலபாடம் சைவவினாவிடை, சிவா லய "தரிசனவிதி முதலியநூல்களில் "யாவராயினும் தங்கள் தங்கள் சாதிக்கு விதித்த விதிகடவாது சிவனைவழிபடின் முத்திபெறுவர். அவ்விதிகடந் தோர் பயன்பெறார்" என்பதாதியாகக் கூறியதும் என்றுணர்க.

"பன்னிரு திருமுறைகளிலும் பதினான்கு மெய்கண்டநூல்களிலும் இல் லாத எந்தமுடிவையும் செந்தமிழ்ச் சிவநெறிஅன்பர்கள் கண்மூடித்தனமாக ஏற்கமாட்டார்கள் என்று முடிவுகட்டிக்கொண்ட ஆராய்ச்சிக்காரர்கள் அம்

முடிபுக்கு மாறுபட்டு அத்திருமுறைகளிலும் சித்தாந்த நூல்களிலும் மெய்நூலென்றும் முதனூலென்றும் பாராட்டப்பெற்ற ஆகமங்களையும் அவ்வாகமங்களிற் சொல்லப்பட்ட விதிகளையும் இகழமுன்வந்தது என்னநியாயத்திற் சேர்ந்ததென்று விளங்கவில்லை.

## சுருதி லக்ஷணம்.

(டுசு) காமிகம் என்ற ஆகமத்தில் சிவபெருமானுக்கு வழிபாடுசெய்யும் பொழுது தமிழ்வேதங்கள் ஓதல்வேண்டுமென்று குறிக்கப்பட்டிருத்தலால் அத்தமிழ்வேதங்களாகிய தேவாரதிருவாசகங்களை ஆக்கியருளிய நால்வருக்கும் பிற்பட்டகாலத்திலேயே அக்காமிகாகமம் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் துணிகிறார்கள் என்று வரைந்தார்.

இவர் இப்படி வரைந்துவிட்டது சுருதியின்இலக்கணம் இதுவென அறியாமையினாலேயாம். ஸ்ரீவே வி ஸ்ரீமத். சங்கரபண்டிதர் அவர்கள்சைவப் பிரகாசனம் என்னும் நூலிலே, சுருதிப்பிரமாணம் நிலைநிறுத்து மிடத்திலே "சுருதியின் சாமர்த்தியங்களாவன:-.........சுருதியிற் கூறப்பட்ட இறந்ததும், எதிர்வதும், நுண்ணியதும், மறைந்ததும். சேயதும் ஆகியஇவ்விதப்பட்ட அர்த்தங்கள் பொய்ம்மையின்றி உண்மையுடையனவாதல்" எனக்கூறுவதை உணர்க. ஆராய்ச்சியாளர் துணிபெல்லாம் நாம்முன்காட்டிய பிரபல பிரமாணங்களின்முன் நிற்றற்கியலாது ஒதுங்கி ஒழியுமென்று ஓர்க.

## தொல்காப்பியம்.

(டுஎ) இனி, தொல்காப்பியப் பாயிரத்தில் "நான்மறைமுற்றியஅதங் கோட்டாசான்" என்றவிடத்து வடமொழிவேதமோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் அந்நான்மறை வடமொழிநூலன்று; தமிழ்நூல்களாம் என்னும் பூருவபக்கத்தார் கொள்கையை மறுக்கும்சித்தாந்தம் வருமாறு:-

தமிழ் இயனூலாகிய தொல்காப்பியத்துள் வடமொழிநியாயங்களும் அம்மொழி வேதவிஷயங்களும் விரவிக் கூறப்படுதலால் அவற்றைக் கற்றார்க்கன்றி மற்றார்க்கும் அத்தகைய நூலைஇயற்றலும் அதனைக்கேட்டு இதுதக்கதென முடிவுகாண்டலும் சாலாவாகலான், அதங்கோட்டாசானும் தொல்காப்பியரும் அவைகளைக்கற்றவர் என்பதை நன்கிதினுணர்த்துதற்கு "நான்மறைமுற்றிய" என்றும் "ஐந்திர நிறைந்த" என்றும் விசேடித்தார் பனம்பாரனார். அத்துணையே யன்றி வேறன்று.

இக்கருத்தை ஐந்திரநிறைந்த தொல்காப்பியன் என்றமையே தெளிய உணர்த்தும். என்னை? அவ்வியல்பினர் வடமொழி வழக்கும் அம்மொழி வேதவிடயங்களும் அதனுட்கூறுதொழியாராகலான்; வடமொழி நியாயங்களும் அதனுட் போந்தமையானன்றோ, இலக்கணக்கொத்தாசிரியரும் வடமொழி நியாயங்கள் "தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார்—மூன்றிலு முழங்கு மாண்டினு மிலையேல் வடமொழி வெளிபெறவழங்கும்" என்றார். அகத்தியமுணர்ந்து தமிழில் உலகவழக்கும் செய்யுள் வழக்கும் ஆய்ந்ததுபோல ஐந்திரமுணர்ந்தபடியால் சம்ஸ்கிருதத்தில் உலகமொழியும் வேதமொழியும் ஆய்ந்தமை தானே பெறப்படுதலுங் காண்க.

தொல்காப்பியத்தை அரங்கேற்றும்போது அதைக்கேட்ட அதங்கோட்டாசான் கற்றிருந்தநான்மறை தமிழெனில், அதனை அத்தொல்காப்பியமென்னும் விரிவானதமிழ்நூலில் தொல்காப்பியனார் குறிப்பிடவேண்டுவது அவசி

யம். அவ்வாறுசெய்யாது வடமொழிவேதங்களையும் அவ்வேத விஷயங்களையும் விரித்துச் சொல்லியிருப்பது கொண்டு, தமிழ்நான் மறை யென்றதொரு நூல் இருந்ததில்லையென்பது தெளிவாய் விளங்குகின்றது. தமிழ்மக்களுக்கென இறைவனால் தமிழ்நான்மறையென ஒருதமிழ்நூல் கொடுபட்டிருந்தால் அது அழியுமா? ஸ்ரீ. ஞானசம்பந்தப் பெருமான், வேதம் சிருட்டிகாலந்தொடங்கிப் பிரளயகாலம்வரை நிலைநிற்பதென "மறைமுதனான்கு மூன்றுகால முந் தோன்றநின்றனே" என்றருளினார். திருவாசகத்தில் "மூவாநான்மறை" என்றதும், அழியாத நான்மறைஎன்று பொருள்பட்டு வடமொழி நான்கு வேதத்தையே குறிப்பதாம். திருநாவுக்கரசுநாயனார் புராணத்தில் "வண்டமிழாலெழுதுமறை மொழிந்தபிரான் திருப்புகலி மருங்கு சார்ந்தார்" என அருண்மொழித்தேவர் அருளுகின்றார். இதற்கு இறைவனது திருவாக்காகிய வேதங்கள் என்னும் எழுதாமறைகளின் பொருள்களை எழுதும் 'மறையாகத் தமிழால் அருளியவர். "விருப்புடன் பாடலிசைத்தார் வேதந்தமிழால் விரித்தார் (திருஞான-புரா-289) முதலியவை பார்க்க. நான்மறை எனப்படுவன தமிழிலே முன் இருந்தன என்பது புதியகொள்கை. அஃது ஆசிரியர் முதலிய முன்னோர்களது கருத்தன்று என்பது" என ஸ்ரீமத். C. K. சுப்பிரமணிய முதலியார் B. A. எழுதிய விசேட உரையுங்காண்க. இருமொழியையும் முற்றவுணர்ந்த தமிழ்முனிவராகியசிவஞானயோகிகள் தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தியில் "வடநூலுணர்ந்தார்க்கன்றித் தமிழியல்பு விளங்காதென்பதுமுணர்ந்துகோடற்கன்றே பாயிரத்துள் ஐந்திரநிறைந்த தொல்காப்பியன் என்றதூஉமென்க" என எழுதியிருப்பதை நோக்கின் தமிழ்த்தொல்காப்பியத்தை உள்ளவாறறிதற்கு, வடமொழிப்பயிற்சி இன்றியமையாததென்பதும் விளங்கும்.

இங்கே கூறிய நியாயங்களினாலே, நமக்கு வடமொழிப்பயிற்சி அவசியம் வேண்டப்படும் என்பதும், அதங்கோட்டாசான் கற்ற நான்மறையும்வடமொழி நான்மறையே என்பதும் நிறுவப்படுகின்றன.

(௫௮) "நிறைமொழிமாந்தரது மறைமொழியைப்பற்றிய செய்தி தொல்காப்பியத்தில் சொல்லப்படுவதாலும்......... மறைமொழிகளடங்கிய மறை என்னும் நூல்வகை தொல்காப்பியனார் காலத்துக்கு முன்னமே தென்னாட்டில் வழங்கியுள்ளதென அறிகிறோம். அவைகளே தமிழ்நான்மறைகளெனப் போற்றுதற்குரியன" என்றார்.

இவர் குறித்தது "நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த—மறைமொழி தானே மந்திர மென்ப" என்னும் தொல்காப்பியச்சூத்திரம் போலும். ஆசிரியர் தொல்காப்பியனார் மறை என்னும் நூல்வகையைக்கூற இச்சூத்திரம் வகுத்தார் அல்லர். தமிழ் வழக்கிற்கூறும் செய்யுள் வகையைச் செய்யுளியல் ௪௭௯ம் சூத்திரத்தில் ஆறெனமொழிப எனக்கூறினார். ௪௭௭-ம் சூத்திரத்தில்

"அவைதாம்
நூலி னான வுரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
வேது நுதலிய முதுமொழி யான
மறை மொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான.

என அவ்வாறுவகைச் செய்யுளின் பெயர் கூறினர். அருத்தசூத்திரங்களில் அறுவகைச்செய்யுள் இன்னதெனக்கூறிவந்து, "நிறைமொழிமாந்தராணையிற் கிளர்த—மறைமொழி தானே மந்திரம் என்ப" என்ற சூத்திரத்திலே மந்திரச்செய்யுள் இத்தகையது என உணர்த்தினரேயன்றி, மறை இத்தகையதென உணர்த்தினரல்லர். இச்சூத்திரங்கள் நூல்களின் வகைகளைச்சொல்ல எழுந்தனவும் அல்ல; செய்யுட்களின் வகைகளைக்கூற எழுந்தவையென்றுணர்க. இவ்வுண்மை இச்சூத்திரங்கட்கு உரை ஆசிரியர் எழுதிய உரையாலும் நன்கு நிச்சயிக்கப்படும்.

(ருக) தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 102 வது சூத்திரத்தில் 'அளபிற்கோடல் அந்தணர் மறைத்தே' எனவருதலாலும், மறைமொழிகளடங்கிய மறை என்னும் நூல்வகை தொல்காப்பியனர் காலத்துக்குமுன்னமே செந்தமிழ்நாட்டில் வழங்கியுள்ளதென அறிகிறோம்" என்றார்.

ஒரு நூலுக்கு உரைகாணுமிடத்து, அந்த நூலாசிரியன் கருத்தை அறிந்து, உரைகாணுதல்வேண்டும். அதற்கு, தொல்லாசிரியர்கள் கண்ட பொருள்அமைதியையும் ஆராய்தல் வேண்டும். ஒருபொருளைத் தாம் முன் அமைத்துக்கொண்டு, அப்பொருளை அந்நூலின்கண்ணே புகுத்த முயல்வது கற்றறிந்தோர் கொள்கை அன்று.

எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே
அஃதிவ ணுவலா தெழுந்து புறத்திசைக்கும்
மெய்தரு வளியிசை அளபு நுவன் றிசினே.

என்ற சூத்திரத்தில் அளபிற்கோடல் அந்தணர் மறைத்தே என்ற பகுதியே இவர் எடுத்துக்காட்டியது.

இத்தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரைகாரர் எழுதிய பொருளாவது:— ஆசிரியன் எல்லா எழுத்துக்களும் பிறக்குமாறு முந்நூற்கண்ணே கூறிய வெளிப்படுக்கையினலே யானுமவ்வாறே கூறிய எண்வகை நிலத்தும் பிறக்கின்ற பிறப்போடே அவ்வெழுத்துக்களைக்கூறுமிடத்து, யான் கூறியவாறன்றி, உந்தியிற்றோன்றும் காற்றினது திரிதருகூற்றின்கண்ணே மாத்திரை கூட்டிக்கோடலும் மூலாதாரத்தினெழுகின்ற காற்றினேசையைக் குற்றமற நாடிக்கோடலும் பார்ப்பாரது வேதத்திலுள்ளதே. அந்நிலைமை ஆண்டுக்காண்க. அங்ஙனம் கூறலை ஈண்டுக்கூறலாகாமையின் இந்நூற்கட் கூறுதே உந்தியிற்றோன்றிப் புறத்தே புறப்பட்டு ஒலிக்கும் பொருள்தெரியும் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன். அவற்றினது மாத்திரையை உணர்க என்பதே.

இதனல் பார்ப்பாரது வேதத்தின்கண்ணே உள்ளஎழுத்தொலி வேறுபாடுகள் குறைவற ஆராய்ந்துகொள்ளப்பட்டன என்பதும், அவற்றினைத் தொல்காப்பியனர் தம் நூலின்கண் கூறவில்லை என்பதும் விளங்குகின்றன. ஆகலின் தமிழ்மொழியிலுள்ளவற்றிலும் மிகுந்த ஒலிவேறுபாடுகள் கொண்டுள்ளது வேதமென்பது தொல்காப்பியனர் கருத்தாம். இக்கருத்துக்கியைந்தது வடமொழிவேதமேயாம்.

திருமூலநாயனர் திருமந்திரத் திருமுறையிலே,

ஓது மெழுத்தோ டுயிர்க்கலை மூவைஞ்சு
மாதி யெழுத்தவை யைம்பத்தோ டொன்றென்பர்
சோதி யெழுத்தி னிலையிரு மூன்றுள
நாத வெழுத்திட்டு நாடிக்கொ ளீரே. எனவும்,

ஐம்ப தெழுத்தே யனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போ யஞ்செழுத் தாமே. எனவும்

வருஞ் செய்யுட்கள் மேற்போந்த கருத்துகளுக்குச் சான்ருக விளங்குகின்றன. இங்கே ஐம்பது எழுத்துக்களும் ஐம்பத்தொரு எழுத்துக்களும் குறிக்கப்பெற்றிருத்தல் காண்க.

சிவதருமோத்தரத்தில் சிவஞான தானவியலில், அபக்குவர் இவரெனக் கூறுமிடத்து, "சந்த பேதமுந் தானறியார்" என்று சொல்லப்பட்டுள்ளது இதற்கு உரைகாரர் "வடமொழி தென்மொழியாகிய இருவகைச் சந்தபேதத்தை அறியாதோரும்" எனப் பொருள் கண்டமையின் இருமொழிக்குஞ் சந்தம் பேதமுற்று விளங்குமெனப் போந்தமையினும், இச் செய்யுளின் விசேட உரையிற் காட்டிய வீரசோழியமுடையார் இலக்கணத்தின் மேற்கோளில் வடமொழிச் சந்தம் உகூ எனக் கூறப்பட்டமையினும்,

இருவிதஞ் சந்த மிவற்றென் றெழுத்தா லிலங்குமற்றை
யொருவித மாத்திரை யாலே யொளிரு மொளிருமிது
பொருவரி தாகிய வாரியத் துண்டு பொதியமென்னு
மருவரை மாதவன் கூறுந் தமிழுக் கருகமன்றே. எனவும்,

விளக்கினமையானும் வடமொழிச் சந்தங்கள் தமிழ்மொழிச் சந்தங்கள் போலல்லாது மிகவும் பேதப்பட்டு விளங்குமென்பது உறுதியாயிற்று.

இவ்வாராய்ச்சியினுல், இச்சூத்திரங்கள் பூருவபக்கத்தாருடைய கொள்கையை ஆதரிக்கவில்லையென்பது புலப்படுகின்றது. திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் நூலில் வண்ணை ஸ்ரீமத். சுவாமிநாத பண்டிதராலும், திரிசிரபுரம் ஸ்ரீமத். சாம்பசிவம்பிள்ளை அவர்களாலும் இவை விளக்கப்பட்டிருத்தலும் கண்டு தெளிக.

## மெய்கண்டதேவர்.

(கூ0) மெய்கண்டார் திருவாக்குகளும் நான்மறைகளும் ஆகமங்களும் வடமொழியிலே உள்ளன என்று தெளியவைக்கின்றன.

"ஒன்றென்ற தொன்றேகா ணென்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகாண்—ஒன்றின்றால்
அக்கரங்க ளின்ரும் அகரவுயி ரின்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு" என்பதும்,

"அத்துவித மென்ற சொல்லானே அந்நிய
நாத்தியை யுணர்த்து மாயிட்டு"
அருமறைக ளான் ளொன்றுது
"அத்துவித மென்றறையு மாங்கு" என்பதும்,

"அத்துவித மாத லகண்டமுந் தைவமே
அத்துவிதியன்பிற்றெழு" என்பதும் முதலியனவாய்ச்சிவஞான போதத்தே கூறுகின்ற காரணத்தினால் ஏகம் அத்துவிதம் முதலிய சொற்களை எடுத்துக்கூறி, மெய்ப்பொருளாராய்ச்சிசெய்கின்ற அருமறைகளாகிய வடமொழிவேதங்களையே அவரும் உடன்பட்டனர் என்பது போதரும்.

மண்முத லுளமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
கலேயுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலேயதிலா மச்சிவன்ரு ணேர்.

என இதயகமலத்தின் இயல்புணர்த்தி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணத்தினாலும், அதன்உரையினாலும், வடமொழிஆகமங்களை மெய்கண்டதேவ நாயனார் உடன்பட்டமை உணரப்படுகின்றது.

பண்டிதர், காயமேகோயில் என்ற தலையங்கத்தில் அந்தர்யாகத்தையுணர்த்தும் பாடல்களைக் காட்டியிருப்பினும், மேற்போந்த ஆகம உண்மைகளை ஒதுக்கி வடமொழி ஆகம ஞானம் வேண்டாமெனல் பொருந்தாப் பேச்சேயாம்.

**மறை.**

(கூக) ஆராய்ச்சிக்காரர் சிலர் "அங்கமாய் ஆதியாய் வேதமாகி—அருமறையோ டைம்பூதந் தானே யாகி" என்ற திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தில், வேதம் என்பது ஆரியருடைய வேதத்தையும் மறையென்பது தமிழ் நான்மறைகளையும் குறிக்குமென்பது புலப்படஎழுதுகிறார்கள். தமிழில் நான்மறையென்பதொன்று இருந்ததில்லை. முன்பு காட்டினும். ஆதலால் இத்தேவாரத்தில் மறையென்பது எதனைக் குறிக்குமெனில்; வேதாந்தமாகிய உபநிடதத்தையேயாம். அவ்வாறே முன்னோரும் இத்தேவாரப்பகுதிக்கு உரைகண்டனர். பரிபாடலில் "வேதத்து மறைநீ" என்ற விடத்திலே, பரிமேலழகியார் "மறை—உபநிடதம்" எனப் பொருள் எழுதியது இதனை வலியுறுத்தும். பிறவுமிவ்வாறே.

## பிரணவம் சொல்லி மறைபயிலுதல்.

(கூஉ) "ஓமென்று மறை பயில்வார் பிரமபுரத் துறைகின்ற" என்று திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அருளிய பிரமபுரத் தேவாரப்பதிகத்திலே காணப்படுகின்றது. இத்தொடரிற்கண்ட மறையென்பது ஆரியவேதத்தையும், பயில்வார் என்பது அவ்வேதங்களை அத்தியயனஞ்செய்கின்ற பிராமணர்களையும் குறிக்கும். ஓமென்னும் பிரணவத்தை ஓதியே வேதத்தை ஓத ஆரம்பிக்கவேண்டும் என்பதும், முடிவிலும் பிரணவத்தைச் சொல்லவேண்டும் என்பதும் விதி. இது ஆரியவேதத்துக்கே நியதமானது. அது,

தூமறைக் கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெனப் படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப் பெருங் கடவுளு மயங்கின னென்று
ஞமினிச் சில வறிந்தன மென்பது நகையே.

என்று கந்தபுராணம் கூறுவதாலும் அறியலாகும். நிகழ்காலத்திலும் இந்நியமம் வழங்கப்பெற்று வருகிறது. ஆயின், தேவாராதி தமிழ்மறைகள் ஆரம்பிக்கும்போதும் முடிக்கும்போதும் திருச்சிற்றம்பலம் என்று உச்சரித்து வரும் மரபுண்டு. ஆகவே, "ஓமென்று மறை பயில்வார் பிரமபுரம்" என்ற

மையாலும், நமது சமயாசாரியமூர்த்திகள் முதலிய அருட்செல்வர்கள் கைக் கொண்ட மறை ஆரியத்துள்ளதென்ற உண்மை தெளிவு.

## தத்துவமசி.

(கூரு) தத்துவமசிமகாவாக்கியமும் வடமொழியேயாம். அம்மகாவாக்கியம் சாந்தோக்கிய உபநிடதத்தில் உள்ளது. அது தத்பதம் துவம்பதம் அசி பதம் என மூன்றுபதங்களையுடையது. தத்துவமசி அது நீ ஆனாய் என்னும் பொருள் பயந்துநிற்கும். தத்-அது; துவம்-நீ, அசி-ஆனாய் என்பதனால் அதற்கு முன் ஆகாது தடுத்துநின்றதொரு பொருள்உண்டென்பது சித்தித்தது. அதுவே பாசமென்றுணர்க. அது என்றது பதியை; நீ என்றது பசுவை; ஆனாய் என்பதனாற் பெறப்பெற்ற பாசத்தோடு தத்துவமசி முப்பொருளுணர்த்துமாறு காண்க. "பண்டை மறைகளு மதுநா னானேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" என்பது சித்தியார். இதனை,

வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டைக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச் சியமாமே.

தொம்பதந் தற்பதஞ் சொல்லு மசிபதம்
நம்பிய முக்துரி யத்துமே னாடவே
யும்பத முப்பத மாகு முயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே.

எனத் தத்துவமசிவாக்கியத்தை விரித்துரைக்கும் திருமந்திரமும் காண்க. இங்கே வருகின்ற செம்பொருள் என்னும் மகாவாக்கியத் தெளிபொருளே "சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு" எனத்திருவள்ளுவநாயனாராற் குறிக்கப்பட்டதாம்.

இந்துசாதனத்தில், பண்டைத்தமிழரின் சமயம் என்னும் கட்டுரையில் ஸ்ரீமத் ஜம்புலிங்கம்பிள்ளை அவர்கள் எழுதுவதாவது:—தத்துவமசி என்னும் வேதாந்த மகாவாக்கியம் தொல்காப்பியம் 188-ம் சூத்திரத்திற் குறிக்கப்பட்டிருப்பது அவதானிக்கற்பாலது.

"வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது"

(வேதாந்த விசாரணைக்குரியகல்வி எற்றகாலத்திற் செய்யவேண்டியதவசியம்; அக்கல்வியானது மகாவாக்கியமாகிய தத்துவமசியோடு முரண்படக்கூடாது) என்பதாம். இன்னோரன்ன மேற்கோள்களைக் கொண்டு நோக்குமிடத்து, அருணந்திசிவாசாரியசுவாமிகளும் திருமூலதேவரும் ஆரியமறைகளை உடன்பட்டமையும், பண்டைத்தமிழர்கள் வேதத்தைஅநுசரித்தமையும் தெளிவாகப் புலப்படுகின்றது.

## வடமொழிவழக்கு.

(கூச) இஃதன்றியும் சைவசமயப்பொருட்டுறைகளாகிய உயிரின் அவத்தை பேதங்கள், உடம்பினுள்ளேயுள்ள ஆதாரபேதங்கள், சரியை கிரியை யோக ஞான பிரணவ சமாதியியல்புகள் பிரதிட்டை ஆவாகனம் உத்வாகனம் ஆதிய எல்லாவற்றையும் திருமூலநாயனார் வடமொழிவழக்கிலிருந்தே தம் தமிழ்த்திருமந்திரத்தில் எடுத்து மொழிந்தருளினார், இதன் மெய்ம்மை

அவ்வத்துறைகளைக் கூறும் திருமந்திரப்பகுதிகளெல்லாம் வடமொழிப்பெயர்களே மிக்குப் பயின்றுவரும் உண்மையில் வைத்து உணரப்படும். அத்தகைய மிகப்பல செய்யுட்களுள் ஒன்றை எடுத்துக்காட்டுதும்.

சொற்பத விசுவன் தைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன் பொன்கெற்பன் வியாகிர்தன்
பிற்பதன் சொலிதையன் பிரசா பத்தியன்
பொற்புவி சாந்தன் பொருதபி மானியே. என்பதைக் காண்க.

மேற்காட்டிய இவ்வுண்மைகளால் வடமொழி வேதாகமப்பொருளையே திருமூலமாமுனிவர் தமிழுலகமுய்யத் தமிழால் அருளிச்செய்தார் என்பது வெளிப்படை.

## குமரகுருபரசுவாமிகள்.

(சுரு) மேலும், குமரகுருபரசுவாமிகள், "எழுதாக் கிழவிநின் மொழியெனப் படுதலின்—நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதல்—மன்பெரும் புலமைத் தன்றே யும்பரின்—நின்னோ ரன்னோ ரின்மையி னின்னிலை—கூறாய் நீயெனிற் றேறுந ரிலரால்—தன்னுடை யாற்றன் முன்னர் முன்னத்—தற்புகழ் கிளவியுந் தகுமென் றம்ம—நிற்புகழ்ந் திசைத்தனை நீயே யாக—இருடீர் காட்சிப் பொருடுணிந் துணர்ந்தா — தியங்கா மரபினி னிதுவிது பொருளென—மயங்கக் கூறுதல் மாண்புடைத் தன்றே—அளவில் காட்சியை யையமின் றுணர்த்தலிற்—றளரா நிலைமைத் தென்ப வென்றலிற்— றன்னுடை மயக்கந் திசைமேல் வைத்துச்—சென்னெறி பிழைத்தோன் றிசைமயங் கிற்றென—மொழிகுவ தேய்ப்ப மூதுக்குறை வின்மையிற்—பழமறை மயங்கிற் றென்னு முழுவதும் — எய்யா திசைக்குதும் போலும் — ஐயநின் றன்மை யளப்பரி தெமக்கே" என அருளுகின்றார்கள்.

இதற்கு டக்டர் உ. வே. சாமிநாதையர் எழுதிய குறிப்புரை விளக்கம் வருமாறு:- இச்செய்யுளின் பிற்பகுதியின் கருத்து விளங்குதற்பொருட்டுப் பின்வருமாறு வினவிடைகளாக்குதல்பொருந்தும்.

வினா:— இறைவன் வாய்மொழியே வேதம் என்பர்; அதன்கண் அவனது தன்மை கூறப்படும். தன்னைத்தான் புகழ்தல் அறிவுடையோர் செயலாகுமோ?

விடை:— அவனது பெருமை பிறரால் அறிவரிதாதலின் அதனை அவனே கூறல் வேண்டும். தன்னுடையாற்றலுணராரிடையே தற்புகழ்தலும் தகுமாதலின் இது பொருந்தும்.

வினா:- வேதம் இறைவன் உரைத்தது எனின், அதன்கண் பரம்பொருளின் நிலையை மயங்க உரைத்தது என்?

விடை;— அது மயங்கக் கூறவில்லை; ஐயமில்லாமலேஉணர்த்தியது.

வினா:— வேதம் மயங்கிற்றென்று பிறரும் கூறுகின்றனரே.

விடை:— திசைமயக்கத்தையடைந்த ஒருவன் தனது மயக்கத்தைத் திசையின்மேல் வைத்துத் திசை மயங்கிற்றென்று கூறுதலைப்போலத் தம் மயக்கத்தை வேதத்தின்மேல் ஏற்றிக்கூறியதே ஆகும் அது.

வினா:— பின் அவர் மயங்கற்குக்காரணம் என்ன?

விடை:— அவர்கள் முற்றும் உணர்ந்து உண்மையை அறியவில்லை. என்பதாம்.

மேற்காட்டிய குமரகுருபரசுவாமிகள் திருப்பாடற்பகுதியால் "ஆரியரே வேதத்தைக் கட்டினார்கள்" எனவும், "இருக்குமுதலிய ஆரியவேதங்களைத்தமிழர்கள் ஏற்றல் கூடாது" எனவும், "இறைவன் இயல்புகளை ஆரிய வேதங்கள் கூறவில்லை" எனவும். "ஆரியர் தமக்கு உயர்வுதேடுவதற்காக வேதத்தை இறைவன் இயற்றினார் எனக்கூறுகின்றனர் எனவும் நவீனர் கூவும் கூற்றுக்கள் பொருளற்றனவாமென்பது நன்கு நிறுவப்படுகின்றன. இன்னும்,

"அருமறை" என்று மெய்கண்டதேவநாயனாரும், "பண்டை மறைகள்" என்று அருணந்திசிவாசாரியசுவாமிகளும், "பழமறை" என்று குமரகுருபரசுவாமிகளும்; "உன்னிடைப் பிறந்த வேதம்" "ஏற்றமதாகிய மறைக்கும் யாமுனஞ்-சாற்றிய ஆகமந் தனக்கும்" என்பதாதியாய் கச்சியப்பசிவாசார்யசுவாமிகளும் வேதாகமங்களை அருமையும் பெருமையும் பழமையும் ஏற்றமுமுடையன என்று பாராட்டியிருக்க, அவற்றைப் "புல்லியமக்களால் எழுதப்பட்டன" என்றும், "அவை ஆரியருக்கே உரியன" என்றும் பேசும் பேச்சுக்கள் அபசாரமேயாம்.

## தமிழ்மதம்.

(கூசு) "தென்னிந்தியரின் சிவமதம் அந்நாட்டுக்கே சொந்தமானது; அதன் கொள்கைகள் தமிழ்மதத்தைப் பின்பற்றியன. ஆகமநெறிநின்று முத்திபெற்ற அடியார்கள் தென்னாட்டிலேதான் தோற்றினார்கள்" என முடிவு செய்கிறார்கள் சிலர். இக்கூற்று எவ்வளவுதூரம் உண்மையானதென்பதை நோக்குவாம்.

"சைவம் உலகம் எல்லாம் பரந்தது, பரந்து ஓங்கியது. தமிழ்நாடும் தமிழரும்மட்டும் சைவத்திற்கு இலக்கானவர்" என்பதுதவறு. "உலகமெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்துமன்ன" எனவும், 'முதற் சைவம்' எனவும், 'பொருட்சமயமுதற் சைவநெறி' எனவும் வரும் திருவாக்குகள் இக்கொள்கையை நிறுத்துவனவாம். அப்பாலுமடிச்சார்ந்தார் புராணத்திலே சேக்கிழார் சுவாமிகள்,

மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பை
புதியமதி நதியிதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தார்கள்
செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார் தாமே.

என்றருளினமையால் இனிது விளங்கும். இஃதிப்படியாகத் தெலுங்குச்சைவர், கன்னடச்சைவர், வடமொழிச்சைவர், ஆங்கிலச்சைவர் முதலியோரை நாம் எவ்வாறு ஒதுக்கிச் சைவத்தைக் கணக்கிடக்கூடும். பம்பாய்மாகாணத்திலுள்ள காம்பிலியில் வாழ்ந்த நேசநாயனார் நமது நாயன்மார்களில் ஒருவர். மேலேகாட்டிய கொள்கையினாலேயும், அடையாளவகையிலேயும் எங்கும் பரந்தசைவம் காலத்தையும் இடத்தையும் பிறகட்டுப்பாடுகளையும் கடந்து நிற்பது என்பதுவிளங்கும்" —(C. K. சு.)

தமிழ் என்பது பாஷை. சமயமன்று.

ஆகவே சிவமதக்கொள்கைகள் தமிழ்மதத்தைப் பின்பற்றியன என்பது பொருளற்ற வெற்றுரையேயாம்.

## அருணகிரிநாதசுவாமிகள்.

(சுசு) வள்ளியை வேட்டவன், "முத்தமிழால் வைதாரையு மங்கு வாழ வைப்போன்" என அருணகிரிநாதசுவாமிகள் கூறியருளியது, தமிழ்மொழியின் தெய்வத்தன்மையைப் புலப்படுத்துமேயன்றி, பூருவபக்கத்தார் வடமொழியைப் புறக்கணிப்பதுபோன்று, சுவாமிகளும் அம்மொழியைப் புறக்கணித்துக் கூறியதென்று யாரேனும் எண்ணுவதற்குச் சிறிதேனும் இடந்தரமாட்டாது.

1. "மரணப்ர மாத மெனக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டேகிங் கிணிமுகுழ
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர ஞான கரசுர பாஸ்கரனே" எனவும்,

2. "சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ் சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீபணி பாசசங் க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப தீர குணதுங்கனே" எனவும்,

3. "ஜெய ஜெய ஹர ஹர செந்திற் கந்தப் பெருமாளே" எனவும்

சுவாமிகள் வடமொழிச் சொற்களையும் சொற்றொடர்களையும் தமது அருட்பிரபந்தங்களிலே பிரயோகித்திருக்கும் முறையை நோக்கின், அவருக்கு வடமொழியை ஒதுக்கித்தள்ளும் கருத்தில்லை என்பது பொள்ளெனப் புலப்படும். அருணகிரிநாதசுவாமிகள் வேதங்களையும் ஆகமங்களையும் போற்றியுள்ளமை முன்னர்க் காட்டினும். ஆண்டுக்காண்க.

## ஆசியுரை—முடிபுரை.

(சுஎ) வைதிக சைவோத்தமர்களே! இதுகாறுங் கண்ட ஆராய்ச்சியினால், இருமொழிக்கும் கண்ணுதற்பெருங்கடவுளே முதற்குரவர் என்பதும், வேதங்களும் சிவாகமங்களும் அம்முதற்பெருங் கடவுளின் திருவாக்கே என்பதும், அவைகளே முதனூல்கள் என்பதும், வேதங்களும் சைவாகமங்களும் பிற்காலத்தில் எழுதப்பட்டன எனக் கூறும் கூற்றுக்கள் பண்டைப் பெரியோர் நெறிக்கு மாறுபட்டனவேயாம் என்பதும், வேதம் சிவபெருமானையே முழுமுதற்கடவுளெனப் போற்றும் என்பதும், ஆகமத்தின் விதிவழியே ஆலயபூஜை உற்சவாதிகள் நடைபெறவேண்டும் என்பதும், நமக்கு வழிகாட்டியாயிருந்த குருமூர்த்திகள் எல்லாம் வடமொழிமந்திரங்களை எவ்வாறு அங்கீகரித்துள்ளார்கள் என்பதும், வேதத்தில் அருவருக்கத்தக்க செய்திகள் காணப்படுகின்றன என்பது அவற்றின் மெய்ப்பொருளை அறியாமையால் எழுந்த வீண்பேச்சேயாம் என்பதும், தமிழ்த் திருமுறைகள் வேத சிவாகமப் பொருளே என்பதும், சாதி வரம்பு கடவாது நின்றுகொண்டே ஆலயத்தில் புகுதலும் வணங்குதலும் வேண்டும் என்பதும், நான்மறையும் ஆகமங்களும் தமிழில் இருந்தன எனல் கற்பனையே என்பதும் பிறவும் பசுமரத்தாணிபோல் நாட்டப்பெற்றிருக்கின்றன.

இவ்விஷயங்களை வாசித்து வேதசிவாகமங்களுக்கு மாறுகொளக் கூறுவோரது கூற்றைப் பொய்யென ஒதுக்கி, இந்த முதனூல்களின் மெய்ம்மையையும், மேன்மையையும் தேற்றம்பெற உணர்ந்து அவற்றின் வழியொழுகி நல்வாழ்வடைவீர்களாக.

இப் பிரகடனவிஷயமாகத் திரவியோபகாரஞ்செய்த அபிமானிகள் இந்நூல் அதிவிரைவில் வெளிவரவேண்டுமென்று கேட்டுக்கொண்டமையின், இதனை முதற்பாகமாக இப்பொழுது வெளியிட்டிருக்கிறோம். இப்புத்தகத்தின் எஞ்சிய பகுதிகளும், பொருளுபகரித்தற்கு முற்பட்டிருக்கும் அன்பர்களின் உதவியால் இரண்டாம்பாகமாக மிக விரைவில் அச்சிடுதற்குரிய ஆயத்தங்கள் நடைபெறுகின்றன. சுபம்.

வேதாகம நிரூபணம் முதற்பாகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

**'பழைய வைதிகசைவம் பரக்கவே.'**

---

உ

# பொருளுபகரித்த சைவாபிமானிகள்.

| | | | ரூ. | ச. |
|---|---|---|---|---|
| பிரமஸ்ரீ. சு. சுவாமிநாதக்குருக்கள் | நீர்வேலி | ... | 3 | 00 |
| ,, கா. சாம்பசதாசிவஐயர் | ,, | ... | 2 | 00 |
| ,, தியாகராசக்குருக்கள் | ,, | ... | 3 | 00 |
| ,, ச. சோமசுந்தரஐயர் | பருத்தித்துறை | ... | 10 | 00 |
| ஸ்ரீமத். ஞா. சபாபதிதேசிகர் | காரணவாய் | ... | 5 | 00 |
| பண்டிதர். ஸ்ரீமத். தி. கைலாயநாதக்குருக்கள் | காரணவாய் | ... | 5 | 00 |
| ஸ்ரீமத். தி. வைத்தியநாதக்குருக்கள் ... | ,, | ... | 10 | 00 |
| ,, தி. கனகசபைக்குருக்கள் ... | ,, | ... | 5 | 00 |
| ,, வி. செவ்வந்திநாதக்குருக்கள் ... | ,, | ... | 5 | 00 |
| திரு. நீ. சி. முருகேசுஉபாத்தியாயர் | நீர்வேலி | ... | 2 | 00 |
| ,, செ. நடராசா தலைமைஉபாத்தியாயர் | ,, | ... | 7 | 00 |
| ,, சி. சங்கரப்பிள்ளை உபாத்தியாயர் ... | ,, | ... | 2 | 00 |
| ,, சி. ஆறுமுகம்ஆசிரியர் விக்னேசுவரக்கொலீஜ் | கரவெட்டி | | 5 | 00 |
| ,, S. கந்தப்பு ... ... | ,, | ... | 5 | 00 |
| ,, மா. சுப்பிரமணியம் ஆசிரியர் ... | ,, | ... | 5 | 00 |
| ,, வீ. கதிரவேலு ஓவசியர் ... | ,, | ... | 5 | 00 |
| ,, க. செந்திநாதன் ஆசிரியர் ... | வதிரி | ... | 5 | 00 |
| ,, வித்துவான் பண்டிதர் க. நடராசா B.O.L. | கரவெட்டி | | 5 | 00 |
| ,, வே. கந்தப்பு பேராசிரியர் ... | பலாலி | ... | 10 | 00 |
| ,, ஆ. கணபதிப்பிள்ளை தலைமை ஆசிரியர் | கரவெட்டி | ... | 2 | 00 |
| ,, ம. முருகேசு ... ... | ,, | ... | 2 | 50 |
| ,, சி. செல்லையா ஆசிரியர் சை. வி. சா. | பத்தவேனி | ... | 3 | 00 |
| ,, ஆ. கனகசபை வி. கொலீஸ் | கரவெட்டி | ... | 2 | 00 |
| ,, க. வைத்திலிங்கம் | கரவெட்டி மேற்கு | ... | 3 | 00 |
| ,, அரு.வேங்கடாசலம் சிவன்கோயில்மனேஜர் | வல்வெட்டித்துறை | | 5 | 00 |
| ,, வ. இ. ஆனந்தவேல் ... | ,, | ... | 5 | 00 |
| ,, சி. வே. சிவசுப்பிரமணியம் ... | ,, | ... | 5 | 00 |
| ,, நா. செல்வமாணிக்கம் ... | ,, | ... | 5 | 00 |
| ,, V. சிவப்பிரகாசம் ... | ,, | ... | 2 | 50 |
| இடைக்காட்டு வாசிகள் ... | | ... | 48 | 00 |
| திரு. நா. பாலசந்திரநாயகர் தலைமை ஆசிரியர் | அராலி | ... | 10 | 00 |
| நா. பொன்னம்மா ... ... | ,, | ... | 2 | 00 |
| திரு. மு. சதாசிவம் ... | ,, | ... | 3 | 00 |
| ,, க, சின்னத்துரை ... | ,, | ... | 2 | 00 |
| ,, வி. நாகலிங்கம் ... | ,, | ... | 2 | 00 |
| ,, எ. வேலாயுதம் | வட்டுக்கோட்டை | ... | 2 | 00 |
| ,, சி. சோமசுந்தரம் ... | உடுவில் | ... | 2 | 00 |
| ,, த. தாமோதரம்பிள்ளை வர்த்தகர் | அச்சுவேலி | ... | 10 | 00 |
| ,, ப. சிவசரணம் ஜ்யோதிஷம் | ,, | ... | 10 | 00 |
| ,, பண்டிதர் மு. சுப்பிரமணியம் ஆசிரியர் | ஆவரங்கால் | ... | 5 | 00 |
| ,, சு. முருகுப்பிள்ளை ஆசிரியர் | இடைக்காடு | ... | 5 | 00 |

| | | |
|---|---|---|
| திரு. ஆ. வேலுப்பிள்ளை பென்சனர் வல்வெட்டித்துறை ... | 10 | 00 |
| ,, இ. கிருஷ்ணசாமி பருத்-போஸ்மாஸ்ரர் வல்வெட்டித்துறை | 25 | 00 |
| ,, வி. அம்பலவாணர் ஆசிரியர் அச்சுவேலி ... | 10 | 00 |
| ,, இ. காசிலிங்கம் போஸ்ற்மாஸ்ரர் அச்சுவேலி ... | 15 | 00 |
| ,, க. குமரையா சோதிடம் ,, ... | 5 | 00 |
| ,, இ. தாமோதரம்பிள்ளை ஆசிரியர் ,, ... | 5 | 00 |
| புலோலி சைவ ஆங்கில வித்தியாசாலையார் ... | 39 | 00 |
| ,, க. திருநாவுக்கரசு அரசாங்கலிகிதர் அச்சுவேலி ... | 10 | 00 |
| ,, S. சிவசுப்பிரமணியம் புறக்ரர் கொழும்பு ... | 15 | 00 |
| ,, பொ. நமசிவாயம் பென்சனர் பத்தவேணி ... | 10 | 00 |
| ,, க. முருகுப்பிள்ளை அச்சுவேலி ... ... | 10 | 00 |
| ,, வ. சரவணமுத்து சோதிடர் அச்சுவேலி ... | 5 | 00 |
| ,, பொ. நாகலிங்கம் ஆசிரியர் வரணன் ... | 5 | 00 |
| ,, வி. பொன்னுத்துரை ஓவசியர் பத்தவேணி ... | 5 | 00 |
| ,, சி. குமாரசாமி ஆசிரியர் ,, ... | 2 | 00 |
| ,, செ. மாணிக்கவாசகர் போஸ்ர்மாஸ்ரர் அச்சுவேலி ... | 10 | 00 |
| ,, S. மாணிக்கவாசகம் நீர்வேலி S. P. O. ... | 2 | 00 |
| ,, V. கந்தையா அச்சுவேலி ... | 2 | 00 |
| ,, K. கைலாயபிள்ளை ஆசிரியர் இடைக்காடு ... | 2 | 00 |
| ,, க. தம்பிப்பிள்ளை அச்சுவேலி ... | 2 | 00 |
| ஷை சேர்த்துதவியது ... | 14 | 00 |
| ,, க. செல்லையா 178, ஸ்கின்னேஸ்ரேட் கொழும்பு ... | 5 | 00 |
| ,, தா. இராசேந்திரம் கொட்டாஞ்சேனை ... | 5 | 00 |
| ,, வ. இரத்தினம் 144, Dematagoda Road, கொழும்பு | 5 | 00 |
| ,, சி. சிவக்கொழுந்து ,, ... | 5 | 00 |
| ,, ஆ. சோமசுந்தரம் ,, ... | 5 | 00 |
| ,, இ. சுப்பிரமணியம் ,, ... | 5 | 00 |
| ,, N. செல்வத்துரை ,, ... | 5 | 00 |
| ,, க. மகேந்திரன் Bambalapity ... | 5 | 00 |
| ,, S. இராஜநாயகம் Colpetiy ... | 5 | 00 |
| ,, க. கிருஷ்ணர் Kotahena ... | 5 | 00 |
| ,, க. சதானந்தன் Skinners Rd, கொழும்பு ... | 3 | 00 |
| பண்டிதர் பொ. கிருஷ்ணபிள்ளை ஆசிரியர்பாடசாலை, பலாலி | 5 | 00 |
| திரு சி. மயில்வாகனம் தலைமைஆசிரியர், அச்சுவேலி ... | 10 | 00 |
| ,, இ. வே. கந்தையா ஆசிரியர், அச்சுவேலி ... | 5 | 00 |
| ,, சி. சிவசம்பு ,, ,, ... | 5 | 00 |
| ,, கி. நாகலிங்கம் ,, ,, ... | 5 | 00 |
| ,, க. சுப்பிரமணியம் ஆசிரியர் புலோலி ... | 7 | 00 |
| ,, க. வீரகத்தி ஆசிரியர் கரவெட்டி ... | 5 | 00 |
| ,, க. ஆறுமுகம் ஆசிரியர் நீர்வேலி ... | 6 | 00 |
| ,, மு. கந்தையா ஆசிரியர் இடைக்காடு ... | 5 | 00 |
| ,, செ. வைரமுத்து ,, ,, ... | 5 | 00 |
| ,, பொ. செகநாதன் அச்சுவேலி ... | 5 | 00 |